# அம்புலிமாமா

ஏப்ரல் 2000



## பொருளடக்கம்

மதிமுகம் : 102 புன்னகை : 8




Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai-600 026 on behalf of Chandamama India Limited, Chandamama Buildings, Vadapalani, Chennai-600 026. Editor : Viswam


### சிறப்புப் படைப்பாக



ஒற்றைக் கொம்பு ராட்சஸன்

குணமே குவிக்கும் பணம்





கண்ணன் என் அண்ணன்

கண்டுபிடியுங்கள் எழுதுங்கள் பரிசுகளை வெல்லுங்கள்



அம்புலிமாமா



## அம்புலிமாமா

### மார்ச் 2000




### விடைகள் :

(1) துளசி தாசர், பில்வமங்கள்

(2) ஏ) பலராமர் அபிமன்யுவின் தாய்மாமா

பி) உக்ரசேனனுக்கு பிரத்யும்னன் முத்தாத்தா

சி) கடோத்கசன் சிசுபாலனின் மருமகன்

டி) பரீட்சித்து கீசகனின் மருமகளின் மகன்

ஈ) கர்ணன் சுபத்திரையின் அத்தான்

(3) 1. சண்டசம்ஹிதை-சண்டர்- கி.பி. முதல் நூற்றாண்டு

2. சுஸ்ருதசம்! ஹிதை, சுஸ்ருதர் கி.பி. இரண்டாவது நூற்றாண்டு

3. ராஜதரங்கிணி–கஷ்மீர் மன்னர்களின் வரலாறு கலஹணர்–12வது நூற்றாண்டைச் சேர்ந்தவர்

4. அர்த்த சாஸ்திரம் கௌடில்யர் (சாணக்கியர்) கிமு.3–4 நூற்றாண்டில் இருந்தவர்

5. நாட்டிய சாஸ்திரம் பரதமுனிவர்– கிமு 3வது நூற்றாண்டில் - கிபி முதல் நூற்றாண்டு மத்தியில்

# ஆக்கபூர்வமான போட்டிகள்



## அம்புலிமாமா

### வாசகர்களுக்கு



உங்கள் அறிவுத்திறனைக் காட்ட பல்வேறு போட்டிகளில் கலந்து கொள்ளுங்கள்.



### போட்டோ வாக்கியப்போட்டி

1. ஒன்றுக்கொன்று ஏதாவது வகையில் தொடர்புள்ள இரு போட்டோக்களை இளம்போட்டோகாரர்கள், அத்தொடர்பு பற்றிய விளக்கத்துடன் எமக்கு அனுப்பலாம். தேர்ந்தெடுக்கப்படும் (இரு) போட்டோக்களுக்கு பரிசு ரூ.500/-
2. ஒரு பழமொழியைப் பிரசுரிக்கிறோம்.



அதை விளக்கும் நிகழ்ச்சியையோ, உங்கள் சொந்த அனுபவத்தையோ அல்லது புதிய பழைய கதைகளையோ 300 சொற்களுக்கு மேற்படாமல் எழுதி அனுப்புங்கள்.

இம்மாதப் பழமொழி:

**ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையுமா?**

தேர்ந்தெடுக்கப்பட்ட படைப்பிற்குப் பரிசு ரூ.500/-

உங்கள் படைப்பு ஏப்ரல் 30க்குள் எமக்குச் சேர வேண்டும். பரிசு பெற்ற படைப்பு ஜூன் மாத இதழில் பிரசுரிக்கப்படும்.

உங்கள் படைப்புகளை அனுப்ப வேண்டிய முகவரி : **அம்புலிமாமா ஆக்க பூர்வமான போட்டிகள்,** சந்தமாமா பில்டிங்ஸ், வடபழனி, சென்னை - 600 026.

- ஆசிரியர்



நிறுவனர் :

பி. நாகிரெட்டி சக்ரபாணி

## தலையங்கம்

# தாய் மொழியின் முக்கியத்துவம்

ஒவ்வொரு ஆண்டிலும் பிப்ரவரி 21ந் தேதியை 'தாய் மொழி' நாளாகக் கொண்டாட வேண்டு மென்று யுனெஸ்கோ (ஐக்கிய நாடுகள் கல்வி, விஞ்ஞான, பண்பாட்டு அமைப்பு) அறிவித்துள்ளது. 1952ல் இந்நாளில்தான் டாக்காவிலும் அதனைச் சுற்றியுள்ள இடங்களிலும் எவ்வளவோ ஆண்களும் பெண்களும் தங்கள் மீது உருது மொழி திணிக்கப்பட்டதை எதிர்த்துத் தம் உயிரைத் தியாகம் செய்தார்கள். டாக்கா அப்போது பாகிஸ்தானின் கிழக்கு வங்காள மாநிலத்தின் தலை நகராக இருந்தது. அப்போதைய பாகிஸ்தான் பிரதமர் நஜுமுத்தீன் உருது மொழி மட்டுமே ஆட்சி மொழி எனவும் வங்க மொழிக்கு எந்தவித அரசாங்க மதிப்பு கிடையாது எனவும் தீர்மானித்தார்.

அறிவு வளர்ச்சிக்கு தாய் மொழியில் ஒருவருக் குப் போதிய அறிவு இருக்க வேண்டுமென்று கல்வித்துறையில் வல்லுநர்களும் மனத்தத்துவ விஞ்ஞானிகளும் கூறுகிறார்கள். தம் தாய் மொழியை அலட்சியம் செய்யக் கூடாது என்று நம் வாசகர்களை நாம் கேட்டுக் கொள்கிறோம் தாய் மொழியை அலட்சியப் படுத்துவதால் அது அழியும். பெற்றோர்கள் தம் குழந்தைகள் தாய் மொழியில் போதிய அறிவு பெறச் செய்ய வேண்டுமெனவும் நாம் அவர்களிடம் வேண்டிக் கொள்கிறோம்.

# செய்திச் சுடர்

## கனடா வழிகாட்டுகிறது

ஒரு சிகரெட் குடிப்பதால் ஒருவன் தன் வாழ்வில் 11 நிமிடங்களை இழக்கிறான் என்று சென்ற இதழில் விவரமாகக் கூறிஇருந்தோம். கனடா நாடு சிகரெட் பெட்டிகளின் மேல் புற்று நோயால் பாதிக்கப்பட்ட வாய்ப் பகுதியையும், புப்புசங்களையும் வண்ணப் படங்களில் அச்சடித்து



இனியும் சிகரெட் குடிப்பவர்கள் மனதில் பயம் ஏற்படச் செய்வதற்கு யோசித்து வருகிறது.

## அதிகாரி வழிகாட்டினார்!

மத்தியப் பிரதேசத் தலைநகர் போபாலின் ஜெயப்பிரகாஷ் மருத்துவ மனையில் ஒரு நாள் காலை ஓரேயடியாகச் சேர்ந்து விட்ட குப்பை கூளங்களை ஒரு கனவானும் ஒரு பெண்ணும் பெருக்கி சுத்தம் செய்து கொண்டிருந்தனர்.

அவர்கள் யார்? ஆட்சிக்கான அதிகாரிகளுக்குப் பயிற்சி அளிக்கும் கழகத்தின் இயக்குனர் திரு. பத்மவீர சிங், ஐ.ஏ.எஸ் தான் அந்த கனவான். அவருடன் சேர்ந்து பெருக்கியவர் அவர் மனைவி. இக்காட்சியைக் கண்டதும் அக்கழகப் பயிற்சியாளர்களும் அப்பணியில் ஈடுபட்டனர். அதன் பின் மருத்துவமனை டாக்டர்களும் அவர்களோடு சேர மாதக்கணக்கில் மலைப்போலச் சேர்ந்திருந்த குப்பை நொடிப் பொழுதில் மறைந்து விட்டது.

பிறர் செய்ய வேண்டுமெனக்



காத்திராமல் ஒரு வேலையை நாமே செய்தால் எதனையும் சாதித்துவிட முடியும் என்பதைச் செயலாக்கிக் காட்டினார் உயர் அதிகாரி திரு. சிங்.

## பேரொலி நாட்களுக்கும் செல்வோம்!

உலகம் தோன்றும் போது பல கிரகங்கள் பேரொலி செய்தனவாம். அந்த கிரகங்களைப் படம் பிடிக்க



தற்போது அமெரிக்காவின் தேசீய ஆய்வுக் கூடத்தில் நுண்ணிய கண்ணாடி ஒன்று உருவாக்கப்பட்டு வருகிறது.

# நம் வாசகர்களிடையே கருத்துக் கணிப்பு

அம்புலிமாமாவும் அதன் மற்ற மொழிப் பதிப்புகளும் மீண்டும் 1999 டிசம்பரிலிருந்து வெளியிடப் பட்டு வருகின்றன. இப்போது உங்கள் கையில் இருப்பது ஐந்தாவது இதழ். இதற்கு முன் வெளி வந்த நான்கு இதழ்களையும் நீங்கள் ரசித்துப் படித்து மகிழ்ந்திருப்பீர்கள். கடந்த ஐம்பது ஆண்டுகளுக்கும் மேலாகத் தன் தனிச்சிறப்பால் உங்களைப் பெரிதும் கவர்ந்த இப்பத்திரிகை தற்போது பல மாற்றங்கள் கொண்டிருப்பதைக் காண்கிறீர்கள். பொருளடக்கத்திலும் ஓவிய அமைப்புகளிலும் உயர்ந்து நல்ல தரமான காகிதத்தில் அச்சடிக்கப்பட்டுள்ளது. இம்மாற்றங்கள் நாங்கள் ஒவ்வொரு இதழையும் அதன் முந்தைய இதழை விட உயர்தரமாகக் கொண்டு வர முயன்று வருகிறோம். கடந்த நூறு நாட்களாக எமக்குக் கிடைக்கும் கடிதங்களைக் கொண்டு இந்த மாற்றங்களை வாசகர்கள் கவனிக்காமல் இருந்துவிடவில்லை என்பது தெளிவாகிவிட்டது. நாம் எம் எண்ணப்படி இப்படியே இருந்துவிட விரும்பாமல் எம் வாசகர்கள் இதில் என்னென்ன மாற்றங்களைச் செய்ய விரும்புகிறார்கள் என்றும், எவற்றைச் சேர்க்கவே விரும்புகிறார்கள் என்றும், எவற்றையெல்லாம் ஒதுக்கிவிட்டு அவற்றிற்கு பதிலாக புதிதாக எவற்றைச் சேர்க்க விரும்புகிறார்கள் என்பதனையும் அறிய விரும்புகிறோம். நீங்கள் இதற்கு உதவுவீர்கள்தானே, இதற்காக நீங்கள் எம் வினாக்களுக்கு விடையளிக்க வேண்டுகிறோம். நீங்கள் இவ்வினாத் தாளை குறிப்பிட்டுள்ள இடத்தில் கத்தரித்து விரைவில் தபாலில் அனுப்புமாறு உங்கள் ஒவ்வொருவரையும் கேட்டுக் கொள்கிறோம். இதை மிக எளிதானதாக ஆக்கியுள்ளோம். பெரும்பாலும் கட்டங்களில் நீங்கள் உரிய இடத்தில் இக்குறியை ( ) இட வேண்டியது தான். இனி விடைகளை அளியுங்கள்.

1. இதழ்கள் எனக்குக் கிடைப்பது ☐ சந்தாவின் வாயிலாக
   இதழ்களை நான் வாங்குவது ☐ பேப்பர் போடும் பையனிடம்
   இதழ்களை நான் வாங்குவது ☐ பேப்பர் கடையிலிருந்து
   இதழ்களைக் கேட்டுப்படிப்பது ☐ நண்பனிடம் படிப்பகத்திலிருந்து

2. நான் வழக்கமாக/அவ்வப்போது படிப்பது ☐ காமிக்ஸ் ☐ கதைப்புத்தகங்கள் ☐ சிறுவர்களுக்கான பத்திரிகைகள்

........................................................ (பெயரை எழுதவும்)

3. நான் இப்பத்திரிகையைப் படிப்பது ஆங்கிலத்தில்/தமிழில்/தெலுங்கில் மலையயாளத்தில்/கன்னடத்தில்/ஹிந்தியில்/மராட்டியில்/குஜராத்தியில்/வங்கமொழியில்/அஸ்ஸாமிய மொழியில் ஒரியாவில்/சமஸ்கிருதத்தில்.

4. கடந்த நான்கு மாதங்களில் நான் படித்தது
   ☐ எல்லா நான்கு இதழ்களையும் ☐ மூன்று இதழ்கள் ☐ இரண்டு இதழ்கள் ☐ ஒரு இதழ்



*Cutout on the dotted line*

5. எனக்குப் பிடித்தது இவ்வரிசையில்

☐ தொடர்கதை ☐ புராணம் ☐ வேதாளக்கதை

☐ பல நாட்டுக் கதைகள் ☐ மற்ற கதைகள்

☐ தீர்வு காணப்படாத கதைகள் ☐ இந்தியப் பழம்பெருமை ☐ பெரியோர் வரலாறு

☐ செய்திச்சுடர் ☐ பாரதநாடு அன்றும் இன்றும்

☐ பாரத நாட்டைக் காணல் புதிர்கள் ☐ புதிர்கள்/போட்டிகள்

☐ இன்றைய உலகம் ☐ நல்ல ஆங்கிலம் கற்றல்

☐ நாம் அறிந்து கொள்வோம் ☐ நதிகளின் வரலாறு

(உங்கள் விருப்பத்தை 1லிருந்து 16 வரை வரிசையாக எண்ணிடவும்)

6. அம்புலிமாமாவில் இவற்றைச் சேர்க்க விரும்புகிறேன். (வரிசைப்படி விருப்பம்)

அ) .................................................. ஈ) ..................................................

ஆ) .................................................. உ) ..................................................

இ) .................................................. ஊ) ..................................................

7. அட்டைப்பட ஓவியம் இவ்வாறு இருக்க வேண்டும்

☐ தீரச்செயல் தொடர் கதைக்காட்சி ☐ புராணக்கதை காட்சி

☐ மற்ற கதைகளில் ஏதாவது ஒன்றன் காட்சி

8. இதழின் ரூ. 10 என்ற விலை என்பது ☐ மிக அதிகம் ☐ பரவாயில்லை

☐ குறைக்கலாம் (சற்று தரக்குறைவான காகிதம் பயன்படுத்தி)

9. அ) நான் சந்தாதாரர் ஆ) நான் சந்தாதாரராக விரும்புகிறேன்

பெயர் .................................................................... வயது ........................

முகவரி ................................................ பள்ளி ..............................................

..................................................................................................................

..................................................................................................................

.................................... பின்கோடு ...................... மாநிலம்....................

இ) நான் பள்ளிக்குப் போவது ☐ என்சைகிளில் ☐ பள்ளிக்கூட பஸ்ஸில்

☐ நகர பஸ்ஸில் ☐ என் பெற்றோரின் வண்டியில்

ஈ) என் கைச்செலவு பணம் ☐ ரூ. 100க்கும் குறைவு ☐ ரூ100க்கும் மேல்

பெற்றோரின் கையொப்பம் கையொப்பம்



## வேதாளம் கூறும் கதை

# ஒற்றைக் கொம்பு ராட்சஸன்

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின் அவன் கீழே இறங்கி அத்னைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளிநகைத்து ''மன்னனே! இந்த பயங்கர நடுநிசியில் ஏன் இப்படிச் சிரமப்படுகிறாய்? எந்தப் பலனையும் அடைய விரும்பும் ஒருவன் தன் முயற்சியின் கடைசி கட்டத்தில் இருக்கும் போது



தன் செயலின் லட்சியத்தை மறந்து போய் விரும்பிய பலனை அடையாமல் போய்விடுவதும் உண்டு. இதனை விளக்க வைஜயந்தி என்ற அரச குமாரியின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதையைச் சொல்ல ஆரம்பித்தது.

இந்திரபுரத்து மன்னன் இந்திர சேனனுக்கு விவாகமாகி பதினைந்து ஆண்டுகளாகியும் ஒரு குழந்தை கூடப் பிறக்கவில்லை. பதினாறா வது ஆண்டில்தான் ஒரு பெண் குழந்தை பிறந்தது. மன்னன் அதற்கு வைஜயந்தி எனப் பெயரிட்டு ஒரு ஆண் குழந்தையை வளர்ப்பது போல வாட் போர், குதிரை சவாரி, வேட்டையாடுதல் போன்றவற்றை எல்லாம் கற்றுத்தர, அவள் ஆண் பிள்ளையைப் போல இருக்கலா னாள் மன்னன் இது கண்டு சந்தோஷப் பட்டாலும் ராணி மட்டும் தன் மகளின் போக்கை விரும்ப வில்லை. அவள் கவலை எல்லாம் ஒரு ஆண் மகனைப் போல நடக்கும் தன் மகளை விவாகம் செய்து கொள்ள எந்த இளவரசன் சம்மதிப்பான் என்பதே.

ஒரு நாள் தன் தாயார் உணவு கூட உட் கொள்ளாமல் கவலைப் பட்டுக் கொண்டிருப்பதைக் கண்டு வைஜயந்தி ''அம்மா! நீ என் திருமணம் பற்றிக் கவலைப்படுவது எனக்குத் தெரிகிறது. இதோ பார்! நம் நாட்டை ஆளும் தகுதியுள்ள இளவரசனை நானே தேர்ந்தெடுத்து மணந்து கொள்கிறேன். நீ கவலைப் படாமல் நிம்மதியாக இரு'' என்றாள். அப்போதும் ராணிக்கு ஆறுதல் ஏற்படவில்லை.

மறுநாள் வைஜயந்தி யாரிட மும் சொல்லாமல் தனியாகவே வேட்டையாடக் காட்டிற்குச் சென்றாள். வழக்கம் போல ஆண் வேடத்தில்தான் குதிரை மீதமர்ந்து அடர்ந்த காட்டிற்குள் சென்றாள். பச்சைப் பசெலென் றுள்ள மரம் செடிகளையும் அவற்றில் பூத்துக் குலுங்கும் வண்ண மலர்களையும் கண்டு இயற்கை அழகில் மெய்மறந்து அவள் ஆடாமல் அசையாமல் நின்று விட்டாள். சற்று நேரத்திற் குப்பின் அங்கிருந்து சென்று ஒரு

ஏரிக்கரையை அடைந்தாள்.

அங்கு அவள் குதிரை மீதிருந்து இறங்கி அதனைப் புல் மேய விட்டுவிட்டு ஒரு மரத்தடியே அமர்ந்து இளைப்பாறலானாள். அப்போது தனது குதிரை கனைக்கும் சத்தம் கேட்டு அவள் திரும்பிப் பார்த்தாள். அப்போது ஒரு புலி அவளை நோக்கி வந்து கொண்டிருந்தது. வைஜயந்தி சட்டென வில்லை எடுத்து அம்பை அதில் வைத்து எய்வதற்குள் புலி அவள் மீது பாய்ந்து விட்டது. புலி அவளது வலது கையில் காயப்படுத்தவே அவள் பயந்து கண்ணை மூடிக் கொண்டாள். அடுத்த விநாடி புலி பலமாக உறுமிக் கீழே விழும் சத்தம் கேட்டு அவள் கண்ணைத் திறந்து பார்த்தாள்.

புலி துடிதுடித்து உயிர் விட்டது. அப்போது வில்லுடனும் அம்புடனும் ஒரு அழகிய வாலிபன் அங்கு நின்று கொண்டிருந்தான். அவன் வைஜயந்தியை ஆச்சரியத்துடன் பார்த்து ஏதோ கேட்க முயன்ற போது அவளது கையிலிருந்து இரத்தம் கொட்டவே அவள் மயக்க முற்று விழுந்தாள். அந்த வாலிபன் அவளைத் தூக்கிக் கொண்டு போய் தன் உறைவிடத்தில் ஒரு கட்டிலில் படுக்க வைத்தான். அவளது காயத்திற்கும் மருந்து தடவி கட்டும் போட்டான்.

சற்று நேரத்தில் அவள் கண் விழித்ததும் அவ்வாலிபன் ''இப்போது எப்படி இருக்கிறது? கையில் வலி இல்லையே?'' என்று கேட்டான். அவளும் ''நல்ல வேளை! புலி கையைத் தாக்கித்தான் காயப்படுத்தியது. கழுத்தின் மீது பாய்ந்திருந்தால் என் கதி என்னவாயிருக்கும்! என் அதிர்ஷ்டத்தால் உயிர் தப்பினேன்'' என்றாள்.



அந்த வாலிபனும் ''நான் தடவிய மருந்து நன்றாக வேலை செய்திருக்கிறது. இப்பகுதியில் நான் ஒருவன் தான் எல்லோருக்கும் வைத்தியம் செய்து வருகிறேன் என்னை தண்டபாணி என்று கூப்பிடுகிறார்கள். இது என் தந்தை எனக்குக் கற்பித்த தொழில். மனிதர்களுக்கு மட்டுமல்லாமல் மிருகங்கள் காயப் பட்டால் கூட அவற்றிற்கும் மருந்து வைத்துக் கட்டி குணப்படுத்தி



வருகிறேன்'' என்றான்.

வைஜயந்தியும் ''ஓ! அப்ப டியா?'' என்று கேட்கவே வாலிபனும் '' அதுசரி, நீ ஏன் ஆண் வேடத்தில் இருக்கிறாய்? உன்னைத் தூக்கி உன் குதிரை மீது வைத்து இங்கு கொண்டு வந்தபோது தான் நீ ஒரு பெண் என்பது தெரிந்தது'' என்றான்.

வைஜயந்தியும் தான் அரச குமாரி என்பதை கூறாமல் ''நான் தலைநகருக்குப் போய் ஏதாவது வேலை செய்து பிழைக்க எண்ணிக் கிளம்பினேன். தனியாக இருப்பதால் ஆண் வேடத்தில் செல்வதே நல்லது என்று எண்ணி இந்த வேடத்தில் வந்தேன்'' என்றாள். தண்டபாணியும் ''ரொம்ப சரி, காயத்திற்குத் தடவ மருந்து கொடுக்கிறேன்'' எனக் கூறி மருந்தும் கொடுக்கவே அதை வாங்கிக் கொண்டு வைஜயந்தி கிளம்பினாள்.

அரண்மனையை அடைந்த வைஜயந்தியால் தண்டபாணியை மறக்க முடியவில்லை. அழகான வாலிபன். துணிச்சலுடையவன். மனிதர்கள், மிருகங்கள் என்று எல்லா உயிரினங்களும் வாழ பணிபுரிந்து வருபவன். மணந்தால் அவனையே மணப்பது என அவள் எண்ணிக் கொண்டாள். எப்படியோ ஒரு வாரம் கழிந்தது. ஆனால் அவள் மனதிலிருந்து தண்டபாணியின் உருவமும் நற்குணங்களும் மறையவில்லை. அதனால் அவனைப் பார்த்து அவனது அபிப்பிராயத்தை தெரிந்து கொள்ள அவள் காட்டை நோக்கிச் சென்றாள்.

இம் முறை ஆண் வேடத்தில் செல்லாமல் ஒரு ஏழைப் பெண் ணாகச் சென்றாள். அவள் முன்பு சென்ற ஏரிக் கரையை அடைந்த போது மாலைப்பொழுதாகி விட்டது. அப்போது பனை மர உயரமுள்ள ராட்சஸன் ஒருவன் அந்த ஏரியில் குளித்துக் கொண்டிருந்தான். அவனது தலையில் ஒரு கொம்பு முளைத் திருந்தது. அவனைப் பார்த்த வைஜயந்தி பயந்து அலறியவாறே ஓடலானாள்.

அவளது அலறலைக் கேட்டு அந்த ராட்சஸன் நாலடி எடுத்து வைத்து பொம்மையைத் தூக்குவது

போல வைஜயந்தியைத் தூக்கித் தன் தோளின் மீது போட்டுக் கொண்டு தன் கோட்டைக்குச் சென்றான். அங்கு அவளை ஒரு பெரிய அறைக்குக் கொண்டு போய் இறக்கி ''சின்னப் பெண்ணே! உன்னை நான் தின்னப் போவதில்லை, கல்யாணம் தான் செய்து கொள்ளப் போகிறேன்'' எனக் கூறி அங்கிருந்து போய் கதவை மூடி வெளியே தாளிட்டு விட்டுப் போனான்.

வைஜயந்தி அந்த ராட்சஸனிடமிருந்து எப்படித் தப்புவது என்று யோசிக்கலானாள். காலையானதும் ராட்சஸன் ஒரு குடத்தில் பாலும் ஒரு குலை வாழைப்பழமும் கொண்டு வந்து அந்த அறைக் கதவைத் திறந்து வைஜயந்தி முன் வைத்து ''பெண்ணே! நம் திருமணத்தை எப்போது வைத்துக் கொள்ளலாம்?'' என்று கேட்டான். அது கேட்டு அவள் சிரித்து ''நான் உன்னை மணந்து கொள்கிறேன். ஆனால் உன் தலை நடுவிலுள்ள ஒற்றைக் கொம்பு உன் அழகையே கெடுக்கிறது. அது மட்டுமல்ல, என் ஜாதகப்படி நான் ஒரு ஒற்றைக் கண்ணனையோ, ஒரு காலுடையவனையோ, தந்தைக்குப் பிறந்த ஒரே மகனையோ அல்லது இம்மாதிரி ஒரு அவயவம் உள்ளவனையோ மணந்தால் அவன் திருமணம் நடந்த சில மணி நேரத்தில் இறந்து விடுவான் என்றிருக்கிறது. அதனால் நீ உன் தலையிலுள்ள ஒற்றைக்



கொம்பை அறுத்து எறிந்து விடு'' என்றாள்.

ராட்சஸனோ ''ஐயோ! கொம்பை நான் எடுத்து விட்டால் எனக்கு சக்தி இல்லாது போய் விடுமே'' எனவே வைஜயந்தியும் ''அப்படியானால் ஒரு கொம்பை முதலில் எடுத்து விட்டுப் பிறகு இரு கொம்புகளை தலையில் இரண்டு பக்கங்களிலும் வைத்துக் கொள். அப்போது பார்க்க அழகாக இருக்கும்'' என்றாள். ராட்சஸனும் சற்று யோசித்து ''என் தகப்பனார் இரு கொம்புகளை பத்திரப்படுத்தி வைத்திருக்கிறார். அவற்றை எப்படி என் தலையில் பொருத்திக் கொள்வது?'' என்று கேட்டான்.

அப்போது வைஜயந்தி ''அதற்கு வழி இருக்கிறது. ஏரிக் கரையில் தண்டபாணி என்ற



கெட்டிக்கார வைத்தியர் இருக்கிறார். அவர் அறுவை சிகித்சையில் கைதேர்ந்தவர். அவரைக்கண்டு பேசினால் உன் பிரச்சினைக்கு வழி காணமுடியும்'' என்றாள். உடனே ராட்சஸன் அந்த அறையிலிருந்து வெளியே வந்து கதவை மூடித் தாளிட்டு விட்டு ஏரிக்கரைக்குச் சென்றான்.

அவன் போன பிறகு வைஜயந்தி அந்தக் கோட்டை முழுவதும் சுற்றிப்பார்த்தாள். ஒரு மூலையில் தங்கக் காசுகளாகக் குவிக்கப்பட்டிருப்பது கண்டு ஆச்சரியப் பட்டாள். இருட்டும் போது ராட்சஸன் திரும்பி வந்தான். அவனுடன் தண்டபாணியும் அறுவை சிகித்சைக்கு வேண்டிய ஆயுதங்களுடனும் மருந்துகளுடனும் வந்தான். அப்போது அவனால் வைஜயந்தியை அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லை.

ராட்சஸன் தண்டபாணிக்கு தான் மணந்து கொள்ளப் போகும் வைஜயந்தியை அறிமுகம் செய்து வைத்தான். அவளும் ''இவர் தலையிலுள்ள ஒரு கொம்பை எடுத்து விட்டு தலையின் இரு பக்கங்களிலும் இரு கொம்புகளைப் பொருத்த வேண்டும்'' என்றாள். தண்டபாணியும் ராட்சஸனின் தலையைப் பார்த்துவிட்டு ''முதலில் தலை மத்தியிலுள்ள கொம்பை எடுத்து விட்டு சமதூரத்தில் இரு கொம்புகளையும் பொருத்தி அழகாக விளங்கச் செய்கிறேன்'' என்றான். ராட்சஸனும் ''இதனால் எனக்குள்ள பலம் குறைந்து போய் விடாதே?'' எனக் கேட்கவே வைஜயந்தியும் ''ஒன்றும் குறையாது. இரு கொம்புகளைப் பொருத்துவதால் பலம் இரு மடங்காகி விடும்'' என தைரியம் அளித்தாள்.

தண்டபாணி ராட்சஸனைப் படுக்க வைத்து முதலில் மயக்க மருந்தைக் கொடுத்தான். ராட்சஸன் தன் நினைவை இழந்து கிடக்கவே, அவனது தலையிலுள்ள கொம்பை அவன் முதலில் அறுத்து எடுத்து ஒருபுறமாகப் போட்டான். அப்போது வைஜயந்தி ''சரி, இவனது சக்தி எல்லாம் போய் விட்டது. இனி நாம் இங்கிருந்து போய் விடலாம்'' என்றாள். ஆனால் ராட்சஸன்

தலையின் இரு பக்கங்களிலும் கொம்புகளைப் பொருத்தும் வேலையில் மூழ்கி இருந்த தண்டபாணிக்கு அவள் கூறியது எதுவும் காதில் விழவில்லை.

அப்போது அவள் புலி தன் கையில் ஏற்படுத்திய காயத்தால் ஏற்பட்ட வடுவை தண்டபாணிக்குக் காட்டினாள். அவனும் ''நீயா? புலியைக் கண்டு பயப்பட்ட நீயா இந்த ராட்சஸனை மணந்து கொள்ளப் போகிறாய்?'' என்று கேட்டான். அப்போது ராட்சஸன் தலையில் இரண்டு கொம்புகளை அவன் பொருத்தி முடித்து விட்டான். வைஜயந்தியோ ''நானாவது இந்த ராட்சஸனை மணப்பதாவது? ஒருக்காலும் இல்லை. இவனிடமிருந்து தப்பவே உங்களை இங்கே வரவழைத்தேன். முதலில் நாம் இங்கிருந்து போய் விட வேண்டும். உம். கிளம்புங்கள்'' என்று அவசரப்படுத்தினாள்.

அப்போது ராட்சஸன் முனகவே தண்டபாணி ஏதோ ஒரு மருந்தை அவனது வாயில் ஊற்றினான். ராட்சஸனும் நன்கு தூங்கி சூரியன் உதிக்கும்போது கண் திறந்து பார்த்தான். அதுவரை தண்டபாணி அங்கேதான் இருந் தான். அவன் ராட்சஸனிடம் ''இந்தப் பெண்ணுக்கு உன்னை மணந்து கொள்ள இஷ்டமில்லை போலத் தெரிகிறது. நீ எனக்குக் கொடுப்பதாகக் கூறிய தங்க நாணயங்களை நீயே வைத்துக்



கொண்டு இந்தப் பெண்ணை விட்டுவிடு'' என்றான்.

ராட்சஸனும் சற்று யோசித்து விட்டு ''எங்கள் குடும்பத்தில் எனக்குத் தான் ஒரு கொம்பு இருந்தது. இதன் காரணமாக எங்கள் தலைவனின் மகள் லவங்கி என்னை மணக்க மறுத்து வந்தாள். என்னை யாரும் மணக்க முன் வராததால் தான் இந்தக் குள்ளப் பெண்ணை மணந்து கொள்ள நினைத்தேன். என் தலையில் இரு கொம்புகளைப் பார்த்ததும் லவங்கி என்னை மணந்து கொள்வாள். இனி இவள் எனக்கு வேண்டாம்'' என்று கூறிவிட்டு வேகவேகமாக வெளியே சென்றான். வைஜயந்தி அங்கி ருந்த தங்கக் காசுகளை ஒரு பையில் போட்டு தண்டபாணியிடம் கொடுத்து ''என்னை இரு முறை

நீங்கள் காப்பாற்றியதற்கு இதை வைத்துக் கொள்ளுங்கள்'' என்று கூறிவிட்டு அங்கிருந்து தலைநகருக் குச் சென்றாள்.

வேதாளம் இக் கதையைக் கூறி ''மன்னனே! வைஜயந்தி தண்டபாணியை மணந்து கொள்ளும் நோக்கத்தோடு தானே காட்டிற்கு வந்தாள், ஆனால் இரு முறை தன்னைக் காப்பாற்றிய தண்டபாணியை மணக்காமல் ஏன் அவள் தலை நகருக்குத் திரும்பிச் சென்று விட்டாள்? இதற்குத் தக்க பதில் தெரிந்திருந்தும் நீ கூறா விட்டால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகி விடும்'' என்றது.

விக்கிரமனும் ''வைஜயந்தி நாட்டை ஆளும் தகுதி பெற்ற வனையே தன் கணவனாகத் தேர்ந்தெடுக்க விரும்பினாள். முதலில் தண்டபாணியை காட்டில் பார்த்தபோது அவனது அழகையும் துணிச்சலையும், பொது மக்களுக்குப் பணிபுரியும் மனப் பான்மையையும் கண்டு அவனுக்கு நாட்டை ஆளத் தகுதியும் திறமையும் உள்ளதா எனக் கண்டு கொள்ளவே இரண்டாவது தடவை காட்டிற்குச் சென்றாள். ஆனால் வைத்தியம் செய்ய மட்டுமே தண்டபாணிக்குத் தெரியுமென்றும் வேறொன்றும் செய்ய அவனுக்கு இஷ்டமில்லை என்பதையும் கண்டே அவள் தன் எண்ணத்தை மாற்றிக் கொண்டு தங்க நாணயங்களை எடுத்து அவனிடம் கொடுத்துவிட்டு தலைநகருக்குத் திரும்பிச் சென்று விட்டாள்'' என்று கூறினான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலைந்து விடவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக்கிளம்பிப் போய் முருங்க மரத்தில் மீண்டும் ஏறி விட்டது.





# ஆண்பிள்ளை நான்!

**கா**ளியம்மாள் காளியப்பனை மணந்த புதிதில் சந்தோஷமாக இருந்தாள். ஆனால் இரண்டு வருடங்கள் கழிந்த பிறகு காளியப் பனின் போக்கில் பெரும் மாறுதல் ஏற்பட்டது. அவன் தன் மனைவி யை அடித்து உதைத்துத் துன்புறுத்த லானான். இதனால் அவர்களிடை யே அடிக்கடி சண்டை ஏற்பட, அக்கம் பக்கத்தவர் தலையிட்டு அவர்களைச் சமாதானப் படுத்தி வந்தார்கள்.

இவ்வாறு அக்கம் பக்கத்தவர்கள் அவர்களிடையே சமாதானம் செய்து வைக்கும்போது காளியப் பன் ''இது என் சொந்த விவகாரம். என் மனைவியை நான் அடிப்பேன் உதைப்பேன். அதைக் கேட்க நீங்கள் யார்?'' என்று திமிருடன் கேட் பான். அவர்களும் ''ஒரு குற்றமும் செய்யாத உன் மனைவியை நீ துன்புறுத்தினால் நாங்கள் கை கட்டிக் கொண்டு வேடிக்கையா பார்த்துக் கொண்டிருப்போம்''? என கூறிவிட்டு அவனை இழுத்துக் கொண்டு போவார்கள்.

காளியப்பனின் கொடுமைகள் நாளுக்கு நாள் அதிகரிக்கலாயின. அவற்றைப் பொறுக்க முடியாமல் ஒரு நாள் காளியம்மாள் குளத் திற்குக் குளிக்கப் போனபோது அங்கு அவ்வூரில் வயதானவளும் மிகுந்த அனுபவமும் நிறைந்த வள்ளியம்மாளைக் கண்டாள். அவளிடம் காளியம்மாள் தன் கணவன் செய்யும் கொடுமைகளை எல்லாம் விவரமாகக் கூறினாள். அதை எல்லாம் கவனமாகக் கேட்ட வள்ளியம்மாள் ''இதற்கு நான் ஒரு வழி சொல்கிறேன் நீ மட்டும் தைரியமாக நான் சொல்கிறபடி செய்தால் உன் கணவனின் கொட்டம் அடங்கி விடும்'' என்று அவள் காதில் ரகசியமாக ஏதோ கூறினாள்.

அதைக் கேட்ட காளியம்மாள் ''ஐயோ! அப்படிச் செய்ய எனக்கு பயமாக இருக்கிறதே'' எனவே,

வள்ளியம்மாளும் ''பயப்படாமல் துணிச்சலுடனும் நான் சொல்கிற படி செய். எல்லாம் சரியாகி விடும்'' என்று தைரியமூட்டினாள்.

காளியம்மாளும் அப்போதும் சற்றுத் தயங்கவே வள்ளியம்மாளும் ''பயப்படாதே. உன் இஷ்ட தெய் வத்தை மனதில் வேண்டிக்கொண்டு செயல்படு. இப்படிச் செய்த மறு நிமிடமே உன் கணவன் பெட்டிப் பாம்பாக அடங்கிவிடுவான் பார்'' என்று கூறிவிட்டுச் சென்றாள். காளியம்மாளும் குளித்து விட்டுத் தன் வீட்டிற்குத் திரும்பி வந்தாள்.

அன்றிரவு காளியப்பன் வீட்டிற் குள் நுழையும் போதே ''ஏய் காளி! எங்கே தொலைந்து போனாய்? வா இங்கே'' என்றுக் கத்தினான். உடனே காளியம்மான் வராமல் போகவே அவன் உரக்க ''ஏய் நான் உன் புருஷன். கூப்பிடுகிறேன் இன்னும் வராமலா இருக்கிறாய்?'' என்று கூறிக் கையில் தடியை எடுத்துக் கொண்டான். அப்போது காளியம்மாள் கையில் உலக்கையை எடுத்துக் கொண்டு ஆவேசத்துடன் ''டேய் காளி! நானும் ரொம்ப நாட்களாகப் பார்த்துக் கொண்டு வருகிறேன். நீ கெட்டவர்களோடு சேர்ந்து கெட்ட வழிகளில் போய்க் கொண்டிருக்கிறாய். நான் தான் இறந்துபோன உன் அம்மாவின் ஆவி. என் தங்கமான மருமகள் காளியம்மாளைப் படாதபாடு படுத்துகிறாய். உன்னை இந்த உலக்கையாலேயே இரண்டு 'போடு' போடுகிறேன் பார்'' என்று கூறி உலக்கையை உயர்த்தினாள்.

அவ்வளவுதான் காளியப்பன் பயந்து போனான். படுக்கை யறைக்குள் ஓடிக் கட்டிலுக்கு அடியில் புகுந்து ஒளிந்து கொண் டான். காளியம்மாள் அங்கும் உலக்கையோடு வந்து அவனை ஒரு குத்து குத்தவே அவனும் ''அம்மா! என்னை விட்டுவிடு. இனிமேல் உன் மருமகளைத்திட்டவும் மாட் டேன், அடிக்கவும் மாட்டேன். துன்புறுத்தவும் மாட்டேன் இது சத்தியம் . நான் ஒரு ஆண் பிள்ளை என்னை அடித்து அவமானப்படுத் தாதே. ஊரார் இதைக் கேட்டால் என்னைக் கேலி செய்வார்கள்'' என்று அலறினான்.

காளியம்மாளும் தன்னைப் பிடித்த சனி அன்றோடு தொலைந்தது என்று எண்ணி உலக்கையோடு அங்கிருந்து வந்த சிரிப்பை அடக்கிக் கொண்டு சென்றாள்.





# தங்க சிம்மாசனம்

## 4

*(தன் நாட்டின் மீது அண்டை நாட்டு மன்னர்கள் படை எடுத்து வர போகிறார்கள் என ஒற்றர்கள் வாயிலாக அறிந்த கௌண்டனிய நாட்டு மன்னன் ஸ்ரீதத்தன் தன் மகன் விஜயதத்தனை உடனே குருகுலத்திலிருந்து வரவழைத்தான். ராஜகுரு சிவானந்தரின் யோசனையில்பேரில் பெரும் புதையலை அடைய தலைநகரின் ஓரத்தில் தோண்டிப்பார்க்க ஏற்பாடு செய்யப்பட்டது. இச்சமயம் மாதவசேனனின் மகள் ஸ்ரீலேகாதன் நாட்டிலிருந்து தப்பி வரவே ஸ்ரீதத்தன் விஜயதத்தனுக்கு அவளை காந்தர்வ முறையில் திருமணம் செய்து வைத்தான். புதையலைக் காத்த சர்ப்பம் கேட்கப்போகும் கேள்விக்கு விடையளிக்க விஜயதத்தன் தயாராக நின்றான்- பிறகு)*

விஜயதத்தன் தன் தந்தையையும் ராஜகுருவையும் வணங்கிவிட்டு சர்ப்பத்தருகே சென்று ''இனி நீ உன் கேள்வியை கேட்கலாம்'' என்றான். சர்ப்பமும் '' மாவீரனே! நான் கேள்வி கேட்குமுன் நான் சொல்லப் போவதை கவனமாகக் கேட்டுக் கொள். என் கேள்விக்கு நீ சரியான பதிலளித்தால் நான் மலர் மாலையாக மாறி உன் கழுத்தில் விழுவேன். விடை தவறானால் உன்னைத் தீண்டி எமலோகத்திற்கு அனுப்பி விடுவேன். இதற்குச் சம்மதமானால் இங்கே நில். இல்லாவிட்டால் போய்விடு'' என்றது.

விஜயதத்தனும் ''சரி, உன் கேள்வியை நீ கேட்கலாம். நான் போக மாட்டேன்'' என்றான். சர்ப்பமும் ''மூன்று மூன்றாகியுள்ள போது மன்னன் கடைப்பிடிக்க வேண்டிய மூன்றுயாவை?'' என்று கேட்டது.

விஜயனும்''முப்பொழுதிலும் மூன்று உலகங்களிலும் மன்னன்



கடைப்பிடிக்க வேண்டியது சத்தியம், தர்மம், நியாயம் என்பனவே'' என்றான்.

அப்போது சர்ப்பம் ''பேஷ் மாவீரா! சரியாக பதில் சொல்லி விட்டாய். நான் இப்போதே மலர் மாலையாக மாறி உன் கழுத்தை அலங்கரிக்கிறேன். இந்த மாலை உன் கழுத்தில் இருக்கும்வரை எந்த விஷமும் உன்னை பாதிக்காது. இந்தப் பள்ளத்தில் மேலும் மூன்றடி கீழே தோண்டினால் உனக்கு ஒரு அபூர்வப் பொருள் கிடைக்கும்'' என்று கூறி உயரக்கிளம்பிப்போய் மலர் மாலையாக மாறி விஜய தத்தனின் கழுத்தில் விழுந்தது.

சர்ப்பம் கூறியபடி அந்தப் பள்ளத்தை மேலும் மூன்றடி ஆழம் தோண்டும்படிக் கட்டளை இட்டுவிட்டு மன்னனும் விஜயனும் ராஜகுருவும் அங்கிருந்து சென்றனர். வெகுநேரம் வேலை யாட்கள் தோண்டியபின் அவர்களது கடப்பாரைகள் ஏதோ ஒரு பொருளின் மீது படவே 'டங்' கென்ற ஒலிகிளம்பியது. உடனே அரண்மனைக்குத் தகவல் தெரிவிக் கப்படவே மன்னன், விஜயன், ஸ்ரீலேகா, ராஜகுரு ஆகியோர் உடனே அங்கு வந்தார்கள்.

வேலையாட்கள் பள்ளத்தி லிருந்து மெதுவாக அந்த அதிசயப் பொருளைத் தூக்கி வந்து ஓரிடத்தில் வைத்தார்கள். அது ஒரு தங்க சிம்மாசனம். நீண்ட காலமாக நிலத்துள் புதைந்து கிடந்ததால் அதன் மீது மண் ஒட்டிக் கொண்டி ருந்தது. அதைத் துடைத்தபின் அது ஒளியை நாலாபுறத்திலும் சிதறியது. அழகுடனும் கலையம்சமும் கொண்ட அதன் கம்பீரத் தோற்றம் பார்ப்போர் மனதைப் பரவசப் படுத்தியது. அதன் மேற்பகுதியில் ஹைஹய வம்சத்துக் குலதேவதை யான காயத்திரிதேவியின் உருவம் பொறிக்கப்பட்டிருந்தது. அதன் பாதத்தில் பெரிய தாமரை மலர் பதிக்கப்பட்டிருந்தது. தேவியின் கிரீடத்தின் மத்தியில் பதிக்கப்பட்ட வைரம் தூய வெண்மையான ஒளியை வீசியது. தேவியின் காலடியில் பொறிக்கப்பட்ட தாமரை மலரில் ஒரு கெம்புக்கல் பதிக்கப்பட்டு செவ்வொளியை

பரப்பிக் கொண்டிருந்தது.

சிம்மாசனத்தின் இருபுறங்களி லும் இரு சிம்மபொம்மைகள் தங்கத்தால் செய்யப்பட்டு வைக்கப் பட்டிருந்தன. அவற்றின் கண் களைக் கண்டாலே ஒரு வித பயம் ஏற்படுவது போல இருக்கும். அந்த சிம்மாசனத்தில் ஏறி அமர மூன்று படிகள் அமைக்கப்பட்டிருந்தன. அவற்றின் இருபுறங்களிலும் கை கூப்பி வணங்கும் நிலையில் பெண் ணுருவப் பதுமைகள் நிறுத்தப்பட்டி ருந்தன. சிம்மாசனப்படிகளில் ஏறுபவரை வணங்கி வரவேற்பது போல அவை காணப்பட்டன.

அனைவரும் அந்த சிம்மாசனத் தையே பய பக்தியுடன் பார்த்த வாறே நின்று கொண்டிருந்தார்கள். அப்போது ஸ்ரீதத்தன் சிம்மாசனத் தின் மேல் பகுதியில் பொறிக்க பட்டிருந்த காயத்திரிதேவியின் உருவத்தைப் பணிவுடன் வணங்கி ''தாயே! நாங்களெல்லாம் உன் குழந்தைகள். உனது அருளையும் ஆசியையும் கொண்டு நான் என் மகன் விஜயனை இந்த சிம்மாசனத்தில் அமர்த்திப் பட்டா பிஷேகம் செய்கிறேன். அவனை என்றென்றும் நல்வாழ்வு வாழ வைத்து நல்லாட்சி புரிந்து வர நீதான் அருள் சுரக்க வேண்டும்'' என வேண்டி நின்றான். விஜயதத்தனும் ஸ்ரீலேகாவும் மன்னனைப் போலவே பயபக்தியுடன் அந்த சிம்மாசனத்தை வணங்கினார்கள்.



மன்னனும் அந்த சிம்மாசனத்தை பத்திரமாக அரண்மனைக்குக் கொண்டுவரும்படி பணியாட் களிடம் கட்டளை இட்டுவிட்டு விஜயதத்தனுடனும் ஸ்ரீலேகாவு டனும் ராஜகுரு சிவானந்தருடனும் கிளம்பி அரண்மனையை அடைந்த போது சீலமுகன் என்ற ஒற்றன் அவனைக்காணக் காத்துக் கொண்டி ருந்தான். அவன் மன்னனைக் கண்டதும் பணிவுடன் வணங்கவே அவன் ஏதோ சொல்ல விரும்பு கிறான் என ஊகித்த மன்னன் ''சீலமுகா! ஏதாவது விசேஷம் இருக்கிறதா?''என்று கேட்டான்.

அவனும் ஆமெனக் கூறுவது போலத் தலையை அசைக்கவே, ஸ்ரீ தத்தனும் ''சரி விவரமாகக் கூறு''



என்றான். சீலமுகனும் ''சம்பக மன்னரான மராள பூபதி தன் மகனான சக்கரபூபதியுடனும் கொஞ்சம் படையுடனும் காளிந்தி நாட்டிற்குப் போயிருக்கிறார். காளிந்தி மன்னரின் மகளுக்கும் தன் மகன் சக்கரபூபதிக்கும் திருமணத்தை நிச்சயம் செய்து விட்டு உடனே விவாகத்தை நடத்த வேண்டுமென்பதே மராள பூபதியின் உத்தேசம். ஆனால் யாரும் எதிர்பாராத விதமாக காளிந்தி அரசகுமாரி திடீரெனக் காணாது போய் விட்டாள். அவள் ஆண் வேடத்தில் அங்கிருந்து தப்பி நம் நாட்டிற்குத் தான் வந்திருக்க வேண்டுமென்று மராள பூபதியும் சக்கரபூபதியும் நம்புகிறார்கள். காளிந்தி மன்னரின் சந்தேகமும் அது தான். நடந்தது என்னவோ நடந்து விட்டது, அது பற்றிக் கவலைப் படாமல் திட்டமிட்டபடி படை எடுத்துப் போகலாமா என மராளபூபதி காளிந்தி மன்னரிடம் கூறவே அம்மன்னர் கூட அதற்கு ஒப்புக் கொண்டு விட்டார்" என்று கூறிச் சற்றுநிறுத்திவிட்டுப் பிறகு மேலும் தொடர்ந்தான்.

''இந்நேரம் சம்பக நாட்டிற்கு குந்தன நாட்டுப் படைகள் போய்ச் சேர்ந்திருக்கும். இருநாட்டுப் படைகளும் நம் நாட்டை நோக்கி வரப்போகின்றன. காளிந்தி நாட்டுப் படை தன் நாட்டை வந்தடைந்த சம்பக நாட்டுச்சிறுபடையுடன் சேர்ந்து வந்து நம்மைத்தாக்க வந்து கொண்டிருக்கிறது. இந்த மூன்று நாட்டுப்படைகளும் காளிந்தி நதிக்கரையில் ஒன்று சேர்ந்து அந்த நதியைக் கடந்து நம் நாட்டில் நுழையப் போகின்றனவாம். இது வரை தெரிந்த விஷயங்கள் இவ்வளவு தான்''

சீலமுகன் இவ்வாறு கூறி முடித்ததும் ஸ்ரீதத்தன் விஜய தத்தனைப் பார்த்து ''விஜயா! இதென்ன? இந்த சீலமுகன் சொல்வதைப் பார்த்தால் உன் மாமா இன்னமும் எதிரிகளோடு சேர்ந்தே இருப்பதாகவே தெரிகிறது. அப்படியானால் நேற்று புறா நமக்குக் கொண்டு வந்த செய்தி நம்மை திசைதிருப்பி விடுவதற்காகத் தானா?'' என்று கேட்டான்.

தன் தந்தை சொன்னதைக் கேட்டு விஜயதத்தன் சற்று யோசித்துவிட்டு ''அப்படி இருக்காது. மாமா இப்போது எதிரிகளிடையே இருந்து வருகிறார். மராளனுக்கு குந்தன நாட்டு மன்னனும் துணையாக இருக்கிறான். அவர்கள் இருவரும் சேர்ந்து காளிந்தி நாட்டைத் தாக்குவார்களோ என்று யோசித்து அவர்களோடு சேர்ந்திருப் பதாக நடித்துக் கொண்டிருக்கலாம். தன் மனம் மாறிவிட்டது என்பதை வெளிக்காட்டாமலிருக்க அவர் அந்த இரு மன்னர்களோடு சேர்ந்தே இருப்பதாக ஒரு பொய்யான தோற்றத்தைக் காட்டிக் கொண்டிருக் கலாம்'' என்றான்.

தன் மகன் கூறியதைக் கேட்ட ஸ்ரீதத்தன் ''ஆமாம். நீ சொல்வது போலவும் இருக்கலாம். அப்படி இருந்தால் புறா வாயிலாக நமக்கு இன்னொரு செய்தி கிடைத்திருக்கு மே. சரி, எதற்கும் நாம் மூன்று மன்னர்களின் படைகளை எதிர்க்கத் தயாராகவே இருக்க வேண்டும். வெற்றி தோல்வியை முடிவு செய்பவர் அந்த பகவான்தான். அவர் மீது பாரத்தைப் போட்டு நாம் செயலில் இறங்குவோம்'' என்றான். பிறகு அவன் ராஜகுரு சிவானந்தரிடம் ''குருவே! நிலமை என்ன என்பது தங்களுக்கு நன்கு தெரிந்ததே. விரைவிலேயே நாம் போர்க்களத்தில் இறங்கித்தானாக வேண்டும். சற்று முன் தங்க சிம்மாசனம் கிடைத்தபோது விஜய



னுக்கு நல்ல அதிர்ஷ்டம் வந்து விட்டது என்று எண்ணி மகிழ்ந்து கொண்டிருந்தேன். அவனுக்குப் பட்டாபிஷேகம் செய்து வைப் பதாக குலதேவதைமுன் வாக்களித் தேன். ஆனால் இப்போதுள்ள நிலையில் நான் என் வாக்கைக் காப்பாற்ற முடியாது போலிருக் கிறதே'' என்று சற்று மனத் தாங்கலுடன் கூறினான்.

ராஜகுருவும் ''மன்னா! நான் சொல்ல நினைத்ததை நீயே சொல்லி விட்டாய். விஜயனுக்கு இப்போது சுக்கிரதசை. ஜாதகப்படி அவனைப் பிடித்திருந்த சனி விலகி விட்டது. இனி அவனுக்கு எவ்வித அபாயமும் இல்லை. இனி அவன் தொட்டதெல்லாம் பொன்னாகும். எந்த முயற்சியிலும் வெற்றியே



அடைவான். எனவே சற்றும் தாமதியாமல் அவனை தங்க சிம்மாசனத்தில் அமர்த்தி பட்டாபிஷேகத்தை நடத்திவிடுவதுதான் சரி என்று எனக்கு தோன்றுகிறது. விஜயதத்தன் மன்னனாகி படைக்கு தலைமை தாங்கி போர்க்களம் சென்றால் வெற்றி அவனுக்கே'' என்றார்.

ராஜகுரு கூறியதைக் கேட்டு ஸ்ரீதத்தனும் விஜயதத்தனும் மகிழ்ந்து போயினர். ஸ்ரீதத்தனும் ''ராஜகுரு சொன்னது சரியே. நம் குலதெய்வமான காயத்திரி தேவியின் உருவம் பொறிக்கப்பட்ட தங்க சிம்மாசனம் கிடைத்தது நல்ல சகுனமே. தேவியின் முழு ஆசியும் அருளும் அவனுக்குக்கிட்டும். எனவே நீங்கள் கூறியது போலவே செய்யலாம்'' என்றான்.

ஸ்ரீதத்தன் கூறியதைக் கேட்டு ராஜகுருவும் மகிழ்ந்துபோய் ''மிக்க மகிழ்ச்சி மன்னா! இளவரசன் சிம்மாசனத்தில் அமர்வதற்கான நல்ல முகூர்த்த வேளையையும் இப்போதே கணித்துக் கூறிவிடுகிறேன்'' என்று கூறி விரல் விட்டு ஏதோ கணக்குப்போடுவது போலப் போட்டார். பிறகு அவர் திருப்தி அடைந்தவராக ''இன்றைக்கு நாலாவது நாள் சூரியோதயம் ஆகி இரண்டு நாழிகைகளுக்குள் நல்ல முகூர்த்தவேளை. அப்போது விஜயனுக்குப் பட்டாபிஷேகம் செய்யுங்கள். அதற்கான ஏற்பாடுகளை இப்போதிருந்தே செய்யுங்கள்'' என்றார்.

விஜயதத்தன் அப்போது ''ஒரு புறம் எதிரிகள் கூடி சதி செய்து கொண்டிருக்கிறார்கள். இச்சமயத்தில் இங்கு பட்டாபிஷேகம்! வேடிக்கையாக இல்லை''? என்றான். ஸ்ரீதத்தனோ ''நீங்கள் கூறிப்பிட்ட முகூர்த்ததில் பட்டாபிஷேகத்தை நடத்தி விடலாம்'' என்று ராஜகுருவிடம் கூறினான். பட்டாபிஷேகத்தை அதிக ஆர்ப்பட்டமில்லாமல் எளிய முறையில் நடத்துவது என்று மூவரும் தீர்மானித்தார்கள்.

பட்டாபிஷேகத்திற்கான ஏற்பாடுகளை உடனேயே செய்ய ஆரம்பித்து விட்டார்கள். இத்தோடு போருக்கான ஆயத்தங்களும் செய்யப்பட்டு வந்தன. வீரர்கள் தம் வாட்கள் பதமாக உள்ளனவா என்று பரீட்சித்துப் பார்க்கலானார்கள். பொற்கொல்லர்களோ அபூர்வ தங்க சிம்மாசனத்தை அழகுற மெருகு

படுத்திக் கொண்டிருந்தார்கள். இப்படியாக முகூர்த்த நாளும் வந்து விட்டது.

கௌண்டனிய மன்னனின் தர்பார் மண்டபம் வண்ணமாலைகளால் அலங்கரிக்கப்பட்டது. வாசனைத் திரவியங்கள் ஏராளமாகத் தெளிக்கப்பட்டன. மண்டபத்தில் சித்திரவேலைப்பாடுகள் செய்யப்பட்ட திரைச் சிலைகள் தொங்க விடப்பட்டிருந்தன. கம்பங்களிலும் சுவர்களிலும் பதிக்கப்பட்ட ரத்தினங்கள் ஒளிவிட்டுக் கண்ணைப் பறித்தன. தர்பார் மண்டபத்தில் அபூர்வ தங்க சிம்மாசனம் வைக்கப்பட்டிருந்தது. மண்டபத்தின் மத்தியில் சிம்மாசனத்திற்குச் செல்லும் வழியில் பட்டு விரிப்புகள் விரிக்கப்பட்டிருந்தன. அவ்வழியின் இருபுறங்களிலும் அதிகாரிகளும் பிரமுகர்களும் அமர ஆசனங்கள் போடப்பட்டிருந்தன.

தங்க சிம்மாசனத்தின் ஒரு பக்கம் அந்தணர்கள் அமர்ந்து வேதமந்திரங்களை உரத்த குரலில் ஓதிக் கொண்டிருந்தார்கள். மறுபக்கம் இசைவாணர்கள் இன்னிசைக் கருவிகளால் இன்னிசை பரப்பிக் கொண்டிருந்தார்கள். அங்கு கூடி இருந்தவர்கள் யாவரும் மகிழ்ச்சிக் கடலில் ஆழ்ந்திருந்தார்கள். எல்லோரும் முகூர்த்த வேளையை ஆவலுடன் எதிர் பார்த்துக் கொண்டிருந்தர்கள்.

விஜயதத்தனும் ஸ்ரீலேகாவும் ஸ்ரீதத்தனை வணங்கி சிவானந்தரின் ஆசிகளைப் பெற்றுக் கொண்டு சிம்மாசனத்தின் முதல் படியில் கால் வைக்கப் போனார்கள். அப்போது கம்பீரமாய் ஒரு இனிய குரல் ''விஜயதத்தா! நில்'' என்று உரக்க ஒலித்தது.

(தொடரும்)



# கங்கையின்

பாரதப்பண்பாடு - வரலாறு
ஒரு உயரிய நாகரீகத்தின் பல கட்டங்கள்

**பரம்பரை பரம்பரையாக உண்மையைக் காண ஆய்வு**

பள்ளிவிட்டதும் ஒரே மகிழ்ச்சியாக சேகர் தன் வீட்டிற்கு வந்து தன் தாயாரிடம் ''அம்மா! கட்டுரைப் போட்டியில் எனக்கு முதல் பரிசு கிடைத்துள்ளது. ''நான் உயர்வாகக் கருதுபவர்' என்ற தலைப்பு கொடுக்கப்பட்டது. தாத்தா கூறிய நசிகேதரைப் பற்றி நான் எழுதிப் பரிசு பெற்றேன்'' என்று பெருமிதத்துடன் கூறினான். அவனது தாயாரும் ''பேஷ். உன் தாத்தா நல்ல கதையைக் கூறியதால் உனக்கு நல்ல பயன் கிட்டியது'' எனக் கூறி சந்தோஷப்பட்டாள்.

சேகரும் ''இம்மாதிரிக் கதைகளில் பல உள் அர்த்தங்கள் அடங்கியுள்ளன. தாத்தா கூறியபடி எழுதியதால் தான் எனக்குப் பரிசு கிடைத்தது" என்றான். அப்போது சோமநாதர் தம் அறையிலிருந்து வெளியே வந்து'' ஆம். நம் புராணக் கதைகளில் பல உட்கருத்துக்கள் புதைந்துள்ளன. அதனால் தான் அக்கதைகள் நிலைத்து நின்று நம் மனதில் ஆழமாகப் பதிந்து விடுகின்றன'' என்றார்.

சோமநாதர் ''நதிகளில் கங்கை நதியை மிகப் புனிதமானதாகக் கருதுகிறோம். ஏன் என்று தெரியுமா?'' என்று கேட்டார். சியாமளாவும்'' எனக்குத் தெரியுமே. அது ரிஷிகேசம், ஹரித்துவாரம், பிரயாகை, வாரணாசி ஆகிய புனிதத் தலங்கள் வழியாகப் பாய்ந்து ஓடி வருவதால் தான்'' என்றாள். சேகரும்'' இல்லை. கங்கையின் கரையில் அந்நகரங்கள் இருப்பதால் தான் அவை புனிதத் தலங்களாகக் கருதப்படுகின்றன'' எனக் கூறினான்.



# தோற்றம்



சோமநாதரும் ''நீங்கள் இருவரும் உங்களுக்குத் தெரிந்த அளவிற்கு விடைகூறினீர்கள். ஒரு நதிக்கரைமீது புனிதத் தலங்கள் இருப்பதால் அது புனித நதி என்றாகி விடாது. அது போலப் புனித நதிக் கரையோரமாக உள்ள நகரங்களெல்லாம் புனிதத் தலங்களாகி விடாது. ஒரு நதியும் அதன் கரையிலுள்ள நகரங்களும் புனிதமானவை என்பதற்கு இன்னும் பல காரணங்கள் உள்ளன. பலவிஷயங்கள் பற்றி நமக்கு இன்னமும் தெரியாது. ஆனால் இந்த உண்மையை நாம் லேசில் ஒப்புக் கொள்வதில்லை. நம்முன்னோர்கள் மலைகளையும், நதிகளையும் கடவுளாகக் கருதி பூசித்து வந்தார்கள். இயற்கைக்கு ஆதாரமாய் சில அபூர்வ சக்திகள் உள்ளன என்று ரிஷிளும் மாமுனிவர்களும் நம்பினார்கள். சாதாரணமாகவே மலைகளையும் நதிகளையும் கடவுளாகவே கருதி வழிபட்டு வந்தார்கள்'' என்றார்.

அப்போது, சேகர் ''இப்படி பக்தி சிரத்தையுடன் வழிபட்டு வந்த மக்களின் போக்கு எப்படி மாறியது?'' என்று கேட்டான். சோமநாதரும்'' நாளாக ஆக மனிதன் ஒவ்வொன்றிலும் அதன் தன்மையையும் பயனையும் அளந்து பார்க்கலானான். நாளை என்னவாகும் என்பது பற்றிச் சற்றும் கவலைப் படாமல் இன்று என்ன ஆதாயம் கிடைக்கிறது. என்றே அவன் யோசிக்கலானான். இந்த அற்ப சுகத்தை அனுபவிக்கும் மனப் பான்மை அவனிடம் குடிபுகுந்து விட்டது. இதனால் கடந்தகாலத்தை இகழ்ந்து எதிர்காலத்தை அசட்டை செய்யும் மனப்பான்மை மனிதனிடம் வந்துவிட்டது. அதனால் சுற்றுப்புறச் சூழலை மாசுபடுத்துவது அதிகரிக்கலாயிற்று.

இயற்கை நமக்கு அளித்த மாபெரும் செல்வமான காடுகள் அழிந்து கொண்டே போகின்றன. நதிகள் பாயும் வழிகள்

**பாரதீயன்**





மாறுகின்றன. நாளுக்குநாள் இவை மெதுவாக இல்லாதும் போய் விடுகின்றன'' என்றார்.

அப்போது இருள் பரவவே மூவரும் வீட்டிற்குத் திரும்பி வந்தார்கள். சேகரும் சியாமளாவும் ஏதோ ஆழ்ந்து யோசிப்பதை கவனித்த சோமநாதர் ''எங்கள் தலைமுறைகளைவிட உங்கள் தலைமுறை புத்திசாலித்தனமாக நடந்து கொள்ளும் என்றே நான் நினைக்கிறேன். ஒளிமயமான எதிர்காலத்தைக் காணவேண்டு மென்றால் கடந்த காலம் பற்றி நன்கு அறிந்து கொள்ள வேண்டியது மிகமிக அவசியம். இது பற்றி நாம் நாளை பேசலாம்'' எனக் கூறினார்.

மறுநாள் மாலை சேகர் சோமநாதரின் அறைக்குள் சென்று'' தாத்தா! இன்று நான் கங்கை நதியின் வரலாறு பற்றி ஒரு புத்தகம் படித்தேன். அதில் படித்ததைச் சொல்லட்டுமா?'' என்று கேட் கவே, சோமநாதரும் ''சொல் கேட் கிறேன். என்றார்'' சேகரும் தான் படித்த கங்கை வரலாற்றைக் கூறலானான்..

''வெகு காலத்திற்கு முன் சகரன் என்ற மன்னன் அசுவமேதயாகம் செய்ய ஆரம்பித்தான். முறைப்படி யாகக்குதிரையை பலநாடுகளில் திரிந்துவர அனுப்பினான். அக் குதிரை பூலோகம் முழுவதும் சுற்றிவிட்டுத் திரும்புகையில் அது மர்மமான முறையில் காணாமல் போய்விட்டது. அதற்குக் காவலாகச் சென்ற அரச குமாரர்கள் அதனைப் பல இடங்களிலும் தேடலாயினர். பூஉலகில், எங்கும் காணாதலால் அக்குதிரையைப் பாதாள லோகத்திற்குப் போய்த் தேடிப் பார்க்குமாறு தன் மகன்களிடம் சகரன் கூறினான். அவனது அறுபத்து நான்காயிரம் புதல்வர்களும் பூமியைக் குடைந்து கொண்டே போய் பாதாள உலகை அடைந்தார்கள்.

அங்கு கபில முனிவரின் ஆசிரமத்தின் முன் யாகக் குதிரை கட்டப்பட்டிருப்பதை அவர்கள் கண்டார்கள். அந்த முனிவர்தாம் அக்குதிரையைத் திருடியவர் என்று எண்ணி அவர்கள் அவரை வாய்க்கு வந்தபடித் திட்டினார்கள். முனிவர் கடும் கோபம் கொண்டு தம் பார்வை யாலேயே எல்லாரையும் எரித்து சாம்பலாக்கி விட்டார். உண்மையில், அக் குதிரையை திருடி அங்கே கொண்டு வந்த கட்டியவன் தேவேந்திரன். சகரன் யாகத்தைச்





செய்து முடித்தால் தன் பதவிபறிபோய்விடுமே என்று



பயந்து அவன் அவ்வாறு செய்துவிட்டான்.

சகரனாலோ அடுத்து அவனது சந்ததியில் வந்த அம்சுமானாலோ திலீபனாலோ முன்னோர்கள் முக்தி அடைய எதுவும் செய்ய முடிய வில்லை. திலீபனின் மகன் பகீரதன் பாதாள உலகில் சாம்பலாகிக் கிடக்கும் முன்னோர் களுக்கு முக்தி கிடைக்கச் செய்ய வேண்டுமெனத் தீர்மானித்து பாதாள உலகிற்குச் சென்று கபில முனிவரைக் கண்டான். தன் முன்னோர்கள் செய்த குற்றத்தை மன்னித்து அவர்கள் நற்கதி அடைய அருள் புரியுமாறு அவன் அவரிடம் வேண்டினான்.

அவரும் ''சரி அவர்களை மன்னிக் கிறேன். ஆனால் அவர்கள் நற்கதி அடைய தேவலோகத் திலுள்ள கங்கையை பூ வ ல கி ற் கு க் கொண்டுவந்து அந்த நீரில் அவர்களது அஸ்தியைக் கரைத்தால் நற்கதி அடைவார்கள்'' என்று கூறினார்.

கங்கையைக் கொண்டு வர இமய மலைக்குப் போய் பகீரதன் பிரம்மாவை நோக்கித் தவம் புரிந்தான்.

பிரம்மாவும் அவன் முன் தோன்றி ''கங்கை ஆகாய வழியாய் பூஉலகிற்கு வரும் போது அதன் வேகத்தைத் தாங்கி கீழே பாயச் செய்ய சிவனால் தான் முடியும். எனவே அவரைக் குறித்து தவம் செய்து அவரது சம்மதம் பெற்றால் கங்கையை அனுப்புகிறேன்'' என்றார். பகீரதனும் சிவபெரு மானைக் குறித்துத் தவம் செய்தான். சிவனும் அவன் முன்தோன்றி அவன் வேண்டியபடி கங்கையைத்



தன் தலையில் தாங்கிப் பின்னர் பூஉலகில் பாய விடுவதாகக் கூறினார்.

பகீரதன் வேண்டிக் கொண்டபடி பிரம்மா கங்கையை தேவலோகத்திலிருந்து பூலோகத்திற்கு அனுப்பினார். கங்கை வெகு வேகமாக வானவழியாக வர அந்த வேகத்தை சிவபெருமான் தம் சடைகளில் தாங்கி கங்கையின் சிறுபகுதியைத் தரை மீது விட அது இமயமலையிலிருந்து இறங்கி வந்தது. பகீரதன் அதை வரவேற்று முன் செல்ல அவன் பின்னால் கங்கை பூவுலகில் சென்றது. பின்னர் பகீரதன் அதனை அழைத்துக் கொண்டு பாதாள லோகம் போய் அங்கு தன் முன்னோர்களின் சாம்பல் மீது பாயச் செய்து அவர்கள் நற்கதி அடைந்து சொர்க்கம் அடையும் படிச் செய்தான்.

சேகர் இதைச் சொல்லி ''தாத்தா! தேவலோகத்திலிருந்து பூவுலகிற்கு வந்தது புனித கங்கை நதி. அது பகீரதனின் முன்னோர்களை நற்கதி அடையச் செய்தது. இதனால் தான் அதனைப் புண்ணிய நதி என்றும் பவித்திரமான நதி என்றும் கூறுகிறார்கள்'' என்று சொல்லி முடித்தான்.

சோமநாதரும் ''பேஷ்! நீ இந்தக் கதையைச் சொன்ன விதம் மிக நன்றாக இருக்கிறது. கங்கை தோன்றியது பற்றிய இன்னொரு கதையும் உண்டு. ஒரு விஷயத்தை மட்டும் நாம் மறந்துவிடக்கூடாது. இந்தக் கதைகளெல்லாம் விஷயங்களைக் குறிப்பால் எடுத்துக் கூறுபவை. எனவே, இப்படியெல்லாம் நடந்திருக்குமா என்றெல்லாம் எண்ணிக் குழம்பிவிடக்கூடாது''. ''இன்று நேரமாகி விட்டது நாளை கூறுகிறேன்'' என்றார்.

(தொடரும்)





# குணமே குவிக்கும் பணம்!

கட்டைய்யனை ஒரு வயதுக் குழந்தையாக இருக்கும் போதே விட்டு விட்டு அவனது தாய் தந்தையர் இவ்வுலகை விட்டுப் போய் விட்டார்கள். அதனால் தாத்தாவின் அரவணைப்பில் செல்லப் பிள்ளையாக வளர்ந்து வரலானான். தாத்தா முத்தைய்ய னும் தனக்குள்ள அரை ஏகர் நிலத்தில் காய்கறிகளைப் பயிர் செய்து அவற்றை விற்று தானும் கட்டைய்யனும் பட்டினிகிடக்கா மல் சாப்பிட்டதோடு கட்டைய்யன் கேட்ட போதெல்லாம் அவனது கைச் செலவுக்கு பணம் கொடுத்து வந்தான்.

கட்டைய்யன் வேலை எதுவும் செய்யாமல் வேளா வேளைக்குச் சாப்பிட்டு சோம்பேறியாகி ஊர் சுற்றி வரலானான். இப்படியே வளர்ந்து இருபது வயது வாலி பனாகி விட்டான். முத்தைய்யனோ குடுகுடு கிழவனாகி முன்போலத் தன் காய்கறித்தோட்டத்தில் வேலை செய்ய முடியாமல் போனான். அதனால் வருமானம் குறையவே வயிறு நிறைய இருவரும் சாப்பிட முடியாமல் சிரமப்படலானார்கள்.

கட்டைய்யனுக்குத் தாத்தாவிட மிருந்து கைச் செலவுக்குக் காசு கிடைக்காதலால் ஊரிலுள்ள தெரிந்தவர்களிடம் கைமாற்று எனக் கேட்டுப் பணம் வாங்கலானான். முதல் சில நாட்களுக்கு முத்தைய் யன் பேரன் என்ற காரணத்தால் சிலர் அவன் கேட்டதும் பணம் கொடுத் தனர். ஆனால் மறு முறை அவன் பணம் கேட்டபோது யாரும் கொடுக்கவில்லை. அதனால் தனக்குப் பணம் தேவைப்பட்ட போது யாரையாவது உருட்டி மிரட்டி அதட்டிப் பணம் பறித்து வரலானான். அவனது கட்டுமஸ் தான் உடலைக் கண்டு பயந்து எல்லோரும் அவன் கேட்ட பணத் தைக் கொடுத்து வரலானார்கள்.

கட்டைய்யன் இவ்வாறு பணம் சம்பாதிக்க ஆரம்பித்தது முதல்

கன்னியாகுமரி சங்கர்



வீட்டுப்பக்கமே போகவில்லை. தன் தாத்தாவைப் பார்க்காமலும் இருந்தான். ஏதோ சத்திரம், சாவடி, மடம் என்று இருந்து கொண்டு காலம் கழிக்கலானான்.

ஒரு நாளிரவு கட்டையயன் சத்திரத்தில் படுத்திருக்கையில் அவன் மீது ஆத்திரம் கொண்ட ஒருவன் அவன் மீது பாய்ந்து அவனைக் கொல்ல வந்தான். அப்போது ஒரு நாய் பலமாகக் குரைக்கவே கட்டையயன் விழித்துக் கொண்டு தன்னைத் தாக்க வந்தவனைக் கதற கதற அடித்துக் துரத்தி விட்டான். கட்டையயன் அன்று முதல் தன்னை எழுப்பிய நாயைத் தன்னோடு வைத்துக் கொண்டு அதற்கும் உணவு போட்டு பிரியமுடன் வளர்த்து வரலானான். அந்த நாயும் பயங்கர வேட்டை நாய் போலப் பருத்து எப்போதும் கட்டையயனோடு திரியலாயிற்று.

கட்டையயன் பல ஊர் சந்தைகளுக்குத்தன் நாயுடன் போய் அங்குள்ள கடைக்காரர்களிடமிருந்து தன் மாமூலை வசூலித்து வரலானான். அவர்களும் அவன் என்ன செய்து விடுவானோ எனப் பயந்து அவன் கேட்ட பணத்தைக் கொடுத்து வந்தார்கள். இதனால் கட்டையயனுக்குப் புதுப்புது நண்பர்களும் கிடைத்தார்கள். புதுப் புது பழக்கங்களும் வந்து விட்டன. இதனால் அவன் தனக்கு தாத்தா இருப்பதையே மறந்து விட்டான்.

அப்போது அவனது நண்பர்களில் ஒருவன் முத்தையயன் காய்ச்சலாகப் படுத்துக் கிடப்பதாகக் கூறவே கட்டையயன் தன் தாத்தாவைக் காணச் சென்றான். முத்தையயனும் பேரனிடம் ''உன்னை பற்றி என்னென்னவோ கேள்விப்படுகிறேனே. இந்த மாதிரி கிடைக்கும் பணம் உனக்கு சமயத்திற்கு உதவாது. அநியாய வழியில் சம்பாதிக்கும் பணம் அழிவைத்தான் தேடித் தரும்'' என்று அறிவுரை கூறினான். கட்டையயன் அதை எல்லாம் கேட்டு விட்டு அங்கிருந்து சென்றான்.

இதற்குச் சில நாட்களுக்குப் பிறகு அவன் வளர்த்து வந்த நாயை அடுத்த ஊரிலிருந்து வந்த ஒரு வேட்டை நாய் கடித்துக் கொன்று விட்டு ஓடிவிட்டது. தன் நாய் இறந்து போன துக்கத்தில் அவன் இரண்டு நாட்கள் எதுவும் சாப்பிடவில்லை. அச்சமயத்தில்

முத்தையன் தன் பேரனைக் காண அவனிருக்கும் இடத்திற்கு வந்தான். கட்டையன் தன் உயிருக்கு உயிரான நாய் இறந்துபோனதை அவனிடம் கூறி கண்ணீர் விட்டு அழுதான்.

முத்தையன் அவனுக்கு ஆறுதல் கூறி ''உன் அடாத செயல்களால் நீ எவ்வளவு பேர்களுக்கு துயரம் விளைவித்திருப்பாய்? அவர்களில் பலர் நீ எப்போது ஒழிவாய் என்றே நினைத்துக் கொண்டிருப்பார்கள். பலரை மிரட்டி வாழ்பவன் ஒவ்வொரு நிமிடமும் தனக்கு என்ன நேருமோ என்று பயந்து கொண்டே இருப்பான். இந்தப் பிழைப்பு நிலையானதல்ல. நீயும் உன் நாயைப் போல இறக்கத்தான் போகிறாய்'' என்று கூறி அவனைத் தன் வீட்டிற்கு அழைத்துச் சென்றான்.

கட்டையன் நான்கு நாட்களுக்கு அந்த வீட்டிலிருந்து வெளியே போகவில்லை. அவனது தாத்தாவின் அறிவுரைகள் அவன் மனதில் படியலாயின.

ஒரு நாள் மாலை இரண்டு நாட்களாகக் காய்ச்சலாக இருந்த முருகன் தன் வயலைக் காவல் காக்கக் கிளம்பிக் கொண்டிருந்தான். அவன் முத்தையனின் அண்டை வீட்டுக்காரன். அவனது மனைவியும் மகளும் உடம்பு உள்ள நிலையில் வயலுக்குப் போக வேண்டாமென்று கூறினார்கள். ஆனால் முருகனோ ''ஐயோ! நான் வயலுக்குக் காவல் இருக்கப் போகாவிட்டால் பயிரை ராத்திரியோடு



ராத்திரியாக அறுத்துக் கொண்டு போய் விடுவார்களே'' என்று கூறினான்.

இதைப் கேட்டுக் கொண்டிருந்த கட்டையன் ''காய்ச்சலில் இருக்கும் நீங்கள் வயலுக்குப் போக வேண்டாம். நான் அங்கு போய்க் காவல் காக்கிறேன்'' என்று கூறி விட்டுக்கிளம்பினான். இரவில் அவன் சாப்பிடுவதற்கு முருகனின் மகள் முத்தம்மாள் உணவு கட்டிக் கொடுத்தாள்

காவலுக்குப் போன கட்டையன் மறுநாள் காலை வெகு நேரமாகியும் வீட்டிற்கு வராமல் போகவே முத்தையனும் முருகனும் அவனைத் தேடிக் கொண்டு வயலுக்குச் சென்றார்கள். அங்கு ஓரிடத்தில் கட்டையன் படுத்து முனகிக் கொண்டிருப்பதை

அவர்கள் கண்டார்கள்.

விஷயம் இதுதான். முருகனின் உறவினன் ஒருவன் முத்தம்மாளை மணக்க விரும்பினான். ஆனால் முருகனும் அவன் மனைவியும் முத்தம்மாளும் அதற்குச் சம்மதிக்க வில்லை. அதனால் ஆத்திரம் கொண்டு அந்த உறவினன் முருகனைக் கொல்ல வயலுக்கு வந்தான். வயலில் காவல் காப்பவன் முருகன் என்று நினைத்து கட்டைய்யனைத் தாக்கினான். கட்டைய்யன் அவனைத் திருப்பி அடிக்கவே இருவரும் வெகு நேரம்வரை சண்டை போட்டார் கள். கட்டைய்யனுக்கு உடல் முழுவதும் காயம். அவனைத் தாக்கியவனின் கை ஒடியவே அவன் அங்கிருந்து ஓடி விட்டான்.

முத்தைய்யனும் முருகனும் கட்டைய்யனை எழுப்பி மெதுவாக நடத்தி வீட்டிற்கு கொண்டு வந்தார்கள். கட்டைய்யனும் நடந்ததைக் கூறவே முருகன் உடனே உள்ளூர் வைத்தியரை அழைத்து வந்து காயங்களுக்கு மருந்து போடவைத்தான். முத்தம்மாளும் அவனை நன்கு கவனித்துக் கொண்டாள். அதனால் அவன் விரைவிலேயே குணமடைந்து விட்டான். தன் தகப்பனாருக்கு பதிலாக வயலுக்குப்போய் அடி வாங்கிக் கொண்ட கட்டைய்யனை முத்தம்மாள் பெரிதும் மதித்து தன் பரிவைக் காட்டினாள்.

ஒரு நாள் காலை முத்தைய்யன் தன் பேரன் கட்டைய்யனிடம் '' நீ வலியப் போய் முருகனுக்கு உதவி செய்து அவனின் உயிரையே காப்பாற்றினாய். அதனால் அவன் மகிழ்ந்து உனக்கு ஐந்து ஏகர் நிலம் கொடுப்பதோடு தன் மகள் முத்தம்மாளையும் உனக்குத் திருமணம் செய்து வைக்க முடிவு செய்திருக்கிறான். முத்தம்மாளும் உன்னை மணக்கச் சம்மதித்து விட்டாள். பார்த்தாயா உன் நல்ல குணம் கொண்டு வந்த பரிசை'' என்றான்.

கட்டைய்யனும் தான் திருந்தி நல்லவனானால் என்ன சுகவாழ்வு கிடைக்கும் என்பதைப் புரிந்து கொண்டு தன் சோம்பேறித்தனத்தை அறவே விட்டொழித்தான்.



# ஆலயங்களும் தலபுராணங்களும்

## மேகதாட்டு

கருத்து : **ஜெயந்தி மகாலிங்கம்**

ஓவியம் : **கௌதம்சென்**




**சே**லத்திலிருந்து வடமேற்கில் பவானி என்ற ஊர் உள்ளது. இங்கு பவானி நதி ஓடுகிறது. கேரளத்து வள்ளுவ நாடு மலையிலிருந்து கிளம்பி தமிழ் நாட்டில் கோவை, ஈரோடு மாவட்டங்களில் 217 கி.மீ தூரம் பாய்கிறது. இந் நதி தன்னுடன் சிறுவாணி, சிற்றாறு, குன்னூர், குந்தா, மோயார் என்ற நதிகளைச் சேர்த்துக் கொண்டுள்ளது.

காவேரியும் பவானியும் சேருமிடத்தைப் புனிதமான சங்கமம் எனக் கருதுகிறார்கள். இங்கு இச்சங்கமத்தில் கண்ணுக்குப் புலப்படாத அமுதாநதி வந்து சேர்வதாகவும் கூறப்படுகிறது. அமுத கலசத்தை ராட்சஸர்களிட மிருந்து காப்பாற்ற அதை பராசர முனிவர் பவானியருகே பூமிக்குள் புதைத்து வைத்தாராம். அவர் திரும்பி வந்து பார்த்தபோது அமுத கலசம் இருந்த இடத்தில் ஒரு சிவலிங்கம் இருந்ததாம். அந்த லிங்கத்தை நகர்த்த

**பவானி சங்கமேஸ்வரர் ஆலயம்**




சிவலிங்கத்தை பராசுர முனிவர் தூக்குவதும்

முயன்றபோது அதன டியிலிருந்து நீர் பீறிட்டு வந்து பவானி நதியில் விழுந்ததாம். அதுதான் அமுதாநதி என்றும் அது இன்னமும் கண்ணுக்குத் தெரியாமல் பவானி நதியில் விழுந்து கொண்டிருப்பதாகவும் கூறுகிறார்கள்.

தமிழகத்துப் புனித ஆலயங்களில் பவானியின் சங்கமேஸ்வரர் ஆலயமும் ஒன்றாகும். 1900ல் எட்மண்ட் க்யரோ என்ற ஆங்கிலேய கலெக்டர் இந்த சங்கமத்தருகே முகாமிட்டிருந்தாராம். அவர் இருந்த கோட்டைப் பகுதியை திடீரென ஆற்று வெள்ள நீர் சூழ்ந்து கொள்ளவே தெய்வாதீனமாக அவர் உயிர்தப்பினாராம். வேத நாயகி அம்மாள் அவரது கனவில் தோன்றி வெள்ளம் பெருகி வருவது பற்றி எச்சரித்ததால் அவர் தந்தப்பல்லக்கு ஒன்றைச் செய்து அம்பாளுக்குச் சமர்ப்பித்தாராம்.

பவானிக்குத் தெற்கே ஈரோடு அமைந்துள்ளது. பவானியின் இரு கால்வாய்களான காளிங்கராயன், பெரும்பானையம் என்பன இங்கு பாய்வதால் ஈரோடை ( இரு ஓடைகள்) என இந்நகரம் பெயர் பெற்றதாம். தக்க யாகத்தில் தக்கனை சிவனார் கொன்றபோது அவனது மண்டையோடு ஈரமாக இங்கு விழுந்ததால் இந்த இடத்தை ஈரஓடு என்கிறார்களாம். ஈரோட்டிற்கு வடமேற்கே மேற்குத் தொடர்ச்சி மலையில் நொய்யல் நதி உற்பத்தியாகி கோயமுத்தூர், திருப்பூர் நகரங்கள் வழியாகப் பாய்ந்து கரூருக்கருகே காவேரி நதியில் சேர்கிறது.

தமிழ் நாட்டின் கோவை தொழில் நகரை தென்னிந்தியாவின் மான்செஸ்டார் என்று கூறுகிறார்கள். பல பஞ்சாலைகளும் நூற்பாலைகளும் மற்றும் பல தொழில்களும் கொண்ட இவ்வூர் இம்மாநிலத்தில் சென்னைக்கு அடுத்த

பெரிய ஊர். இவ்வூரின் மிக அருகில்தான் பேரூர் என்ற சிவஸ்தலம் உள்ளது.

இந்தக் கோவிலின் பட்டீஸ்வரரும் நடராஜரும் அவரது நடன சபை மண்டபமும் பெயர் பெற்றவை. இதன் உட்கோவிலை கரிகால சோழன் கட்டினானாம்.

காவேரியின் மூன்றாவது உபநதியான அமராவதி கரூரருகே காவேரிநதியில் சேர்கிறது. இது ஆனைமலையில் உற்பத்தியாகி 200கி.மீ தூரம் பாய்ந்தோடுகிறது. இதன் குறுக்கே கட்டப்பட்டுள்ள அமராவதி அணை விவசாயத்திற்குப் பெரிதும் உதவுகிறது. இந்த சங்கமம் வரலாற்றுப் புகழ் பெற்றது. சேர, சோழ, பாண்டிய மன்னர்கள் பலமுறைகளில் இங்கு கூடி இருக்கிறார்களாம்.

இச்சங்கமத்தில் சங்கீத உலகில் தியாகராஜருக்குச் சமமான சதாசிவ பிரம்மேந்திரருக்கு ஆண்டுதோறும் உற்சவம் நடைபெறுகிறது. சதாசிவ பிரம்மேந்திரர் கொடுமுடி என்ற ஊரில் காவேரிக் கரையில் அமர்ந்து தியானத்தில் மூழ்கி இருக்கையில் ஆற்றில் வெள்ளம் வந்து அவரை இழுத்துக் கொண்டு போய் விட்டதாம். மணலில் புதைந்து போன அவரைப் பல நாட்களுக்குப் பிறகு தோண்டி வெளியே எடுக்க, அவர் எதுவுமே நடக்காதது போல நடந்து சென்றாராம்.

மேட்டூரிலிருந்து திருச்சிவரை காவேரி பவானி நதிக்கரைகளில் பல தொழிற்



கொடுமுடியின் திருக் கோயில்

சாலைகள் உள்ளன.

இவற்றால் இந்நதிகள் மாசு படுத்தப் படுகின்றன. தொழில் வளர்ச்சி மக்களுக்கு அதிக வேலை வாய்ப்பை



திருப்பூரருகே மாசுபடுத்தப்படும் நொய்யல் நதி

அளித்துள்ளது என்றாலும் இந்நதிகளில் சாயப்பட்டறைகள், பஞ்சாலைகள், சர்க்கரை ஆலைகள் ஆகியவற்றின் ரசாயனக் கழிவு நீர் வந்து விழுவதால் பயிர்கள் கெடுவதோடு மனிதர்களின் ஆரோக்கியம் கெடுகிறது. இந்த ஆறுகளில் வாழும் நீரினங்களும் மடிந்து கொண்டே வருகின்றன.

நாளுக்கு நாள் அதிகரித்து வரும் இந்த மாசு படுத்தும் செயலைத் தடுக்க 1993ல் கழிவு நீரைச் சுத்தப்படுத்தி ஆலைகள் அதை ஆற்றில் விடவேண்டுமென்று திட்டம் தீட்டப்பட்டது. இதன்படி கழிவு நீரை ஆலைகள் சுத்தப்படுத்தி இந்த ஆறுகளில் விடாவிட்டால் அந்த ஆலைகள் மூடப்படும் என சட்டம் இயற்றப்பட்டது. நீதிமன்றங்களும் இதன்படி சில ஆலைகளை மூடவும் உத்தரவிட்டன.

காவேரி, பவானி, நொய்யல் நதிகளில் கழிவு நீர் சேர்ந்து பயிர்களை நாசப்படுத்தி, மனித உயிர்களுக்கு ஆபத்து விளைவித்ததால் இவற்றை மரண நதிகள் எனக் குறிப்பிடலாயினர். திருப்பூர், ஈரோடு, கரூர் ஆகிய ஊர்களிலுள்ள சாயப்பட்டறைகளின் செயல்களால் சுற்றுப் புறச் சூழல் மாசுபடுவது கண்டு நீதி மன்றம் இந்த ஆலைகள் சுத்திகரிக்கும் இயந்திரங்களை 1998க்குள் அமைத்துச் செயல்பட வேண்டும் என்றும் உத்தரவிட்டுள்ளது



ஈரோட்டருகே காவிரியில் சேரும் கழிவு நீர்



# கெட்டிக்காரனே!

குப்பனும், சுப்பனும் நண்பர்கள். எந்த வேலையையும் சேர்ந்தே செய்பவர்கள் அப்படி இருந்தும் எல்லோரும் குப்பனைத் தான் கெட்டிக்காரன் என்று பாராட்டினார்கள். சுப்பனைக் கையாலாகதவன் எனக் கூறி வந்தார்கள். இதனால் சுப்பனுக்கு மனத் தாங்கல் ஏற்பட்டது. ஆனாலும் குப்பன் அவனுக்கு ஆறுதல் கூறி ''யார் என்ன சொன்னாலும் நீ கவலைப்படாதே. என் மதிப்பில் நீ கெட்டிக்காரனே'' என்று கூறி வந்தான்.

ஒருநாள் இருவரும் தம்மனைவியருக்குத் தங்கச் சங்கிலிகள் வாங்கப் பக்கத்திலுள்ள நகரத்திற்குப் பயணமானார்கள். வழியில் ஒரு மரத்தடியே இருபயணிகள் உட்கார்ந்து உரத்தகுரலில் ஏதோ பேசிக் கொண்டிருப்பது அவர்கள் காதில் விழுந்தது. அவர்கள் அந்தப் பயணிகளருகே சென்று என்ன விஷயமென்று விசாரித்தார்கள். அவர்களில் ஒருவர் உயர்தரப் பட்டாடைகள் அணிந்திருந்தார். கோடீஸ்வராராம். வியாபாரத்தில் நல்ல லாபம் கிடைத்துவருகிறதாம். அவருக்கு இரு புதல்விகள். இருவருக்கும் திடீரென ஒரு விசித்திரமான நோய் வந்தது. அது வைத்தியர்களின் சிகிச்சைக்குக் கூடக் கட்டுப்படவில்லை. ஒருநாள் ஒரு சாது அவர் வீட்டிற்கு வந்தாராம். அவர் அப்பெண்களைப் பார்த்து விட்டு அந்த வியாபாரியிடம் ''உன் பாவமே இவர்களைத் தாக்கியுள்ளது. கொஞ்ச நாட்களுக்கு இவர்கள் ஒவ்வொருவருக்கும் ஒரு தங்கச் சங்கிலி வீதம் செய்து அவற்றை யாராவது ஒருவருக்கு எங்காவது

கி. பாலாஜி



பணமும் தந்து சங்கிலிகளை வாங்கிக் கொள்கிறேன்'' என்றான்.

வியாபாரியோ ''அது முடியாது. உன்னை நம்பிநான் வரமாட்டேன். இப்போதே இந்த இடத்தில் ஐநூறு ரூபாய் கொடுத்தால் உனக்கு இவற்றைத் தருகிறேன். அப்படி இல்லை என்றால் வேறுயாருக்காவது விற்றுவிடுகிறேன்'' என்றார்.

அதைக் கேட்ட குப்பன் ''ஆயிரம் ரூபாய் பெறும் சுத்த தங்கத்தாலான இரு தங்கச்சங்கிலிகள் ஐநூறு ரூபாய்க்குக் கிடைக்கும் போது வீணாக ஏன் நகரத்திற்குப் போக வேண்டும்? இவற்றை நாங்களே வாங்கிக் கொண்டு ஊருக்குத் திரும்பிப் போய் விடுகிறோம் என்று அந்த வியாபாரியிடம்'' கூறினான்.

பொற்கொல்லனோ ''இவர்களுக்கு இச் சங்கிலிகளை விற்கக் கூடாது. நான் தான் முதலில் பேரம் பேசினேன். நீங்கள் எனக்குத் தான் விற்க வேண்டும்'' என்று அந்த வியாபாரியிடம் கூறிப் பார்த்தான். வியாபாரியோ அதனை ஏற்காமல் சுப்பன் கொடுத்த இரு நூற்றைம்பது ரூபாயையும் குப்பன் கொடுத்த இருநூற்றைம்பது ரூபாயையும் வாங்கிக் கொண்டு ஆளுக்கு ஒரு சங்கிலி யாகக் கொடுத்து விட்டுச் சென்றார். பொற்கொல்லனோ அந்த வியாபாரியை ஏசியவாறே வேறு பக்கமாகச் சென்றான்.

குப்பனும் சுப்பனும் தம் ஊரை அடைந்ததும் தம் வீடுகளுக்குப் போகப் பிரிந்து சென்றார்கள்.

போய் பாதி விலைக்கு விற்று விடு. பத்து நாட்கள் தொடர்ந்து இவ்வாறு செய்தால் உன் புதல்விகள் குணமடைந்து விடுவார்கள்'' என்று சொல்லிவிட்டுப் போனாராம். அதன்படி தங்கச் சங்கிலிகளை விற்க அவர் போய் கொண்டிருக்கையில் தான் மற்ற பயணியை அந்த மரத்தடியே சந்தித்தார்.

அந்தப் பயணி ஒரு பொற் கொல்லனாம். அவன் அந்த வியாபாரி சொன்னதைக் கேட்டு அவன் தங்கச் சங்கிலிகளைப் பார்த்து விட்டு "இவை நல்ல தங்கத்தால் செய்யப் பட்டவையே. நானே இவற்றை நீங்கள் கூறும் ஐநூறு ரூபாய்க்கு வாங்கிக் கொள்கிறேன். ஆனால் இப்போது என்னிடம் நூறு ரூபாய்தான் இருக்கிறது. என்னுடன் என் ஊருக்கு வாருங்கள். மொத்தப்

குப்பன் தான் போகும்வழிலுள்ள பொற்கொல்லனின் வீட்டிற்குப் போய் தான் வாங்கிய சங்கிலியைக் காட்டி ''இது எவ்வளவு பெறும் என்று சொல்'' எனக் கேட்டான். பொற்கொல்லனும் அதை வாங்கிப் பார்த்து விட்டு'' இதையா வாங்கப் போகிறீர்கள்? இது தங்க முலாம் பூசிய பித்தளைச் சங்கிலி. ஒரு ரூபாய் கூடப் பெறாது. ஏமாந்து போய் இதை வாங்கிவிடாதீர்கள்'' என்று எச்சரித்து அனுப்பினான்.

வீட்டிற்கு வந்த குப்பன் தன் மனைவியிடம் நடந்ததைக் கூறி தான் ஏமாந்து போனதைச் சொல்ல வே அவளும்'' போகட்டும். விட்டுத்தள்ளுங்கள். பிறர் நம்மை ஏமாற்றுவார்கள் என்று நமக்கு ஜோசியமா தெரியும்? இதுவே நல்ல தங்கமாக இருந்திருந்தால் நமக்கு லாபம் தானே. நமக்கு அதிர்ஷ்டமில்லை. அவ்வளவு தான்" என்று ஆறுதல் கூறினாள்.

சுப்பனும் தன் சங்கிலியைப் பொற்கொல்லனிடம் காட்டி அது போலி எனத் தெரிந்து கொண்டான். அவன் வீட்டிற்குப் போனபோது அவன் மனைவி அவனைத் துருவித் துருவிக் கேட்டு எல்லாம் விவரமாகத் தெரிந்து கொண்டு ''இவ்வளவு தான் உங்கள் அறிவு என்று எனக்குத் தெரியும். நான் உங்களுடன் வந்திருக்க வேண்டும். எவனாவது பாதி விலைக்கு தங்கம் தருவதாக கூறினால் அதில் ஏதோ சூது இருக்கிறது என்று புரிந்து கொள்ள முடியவில்லையா?



குப்பனும் இதை நம்பினான் என்றால் அவனும் இந்த மோசடி வேலையில் சம்பந் தப்பட்டிருக் கிறான் என்பது தெரியவில் லையா?'' என்று கத்தினாள்.

சுப்பன் தன் மனதிற்குள் ''குப்பன் கொடுத்து வைத்தவன். அவன் மனைவி இப்படி சீறிவிழ மாட்டாள் இவள் தான் பத்ரகாளி போல கத்துகிறாள்'' என்று எண்ணி வேதனைப் பட்டான்.

குப்பன் ஏன் இப்படி நடந்தது என்று யோசிக்கலானான். அப் போது ஒரு விஷயம் நினைவிற்கு வந்தது. தானும் சுப்பனும் தங்கச் சங்கிலி வாங்கப்போனது யாருக்குத் தெரிந்தது என அவன் நினைத்துப் பார்த்தான். அப்போது அந்த விஷயத்தை அவ்வூர் இருளப்பனிடம் கூறியது அவன்

நினைவிற்கு வந்தது. ஏனெனில் இருளப்பன் தன் மகளுக்கு கல்யாணம் செய்து வைத்தபோது நக்ரத்தில் இருந்து தங்க சங்கிலி வாங்கி வந்தான் அவன் வாங்கிய நகைக்கடை, சங்கிலி விலை ஆகிய வற்றை குப்பன் விசாரித்தான். அதனால் இருளப்பன் ஒருவனுக்குத் தான் குப்பனும், சுப்பனும் தங்கச் சங்கிலி வாங்க நகரத்திற்கு போவது தெரிந்து இருந்தது.

வியாபாரி இரண்டே சங்கிலி களை கொண்டு வந்தான். அவை தங்கம் என்று ஒரு பொற் கொல்ல னை சொல்லவைத்து தங்களை நம்ப வைத்தது எல்லாம் இருளப்பன் செய்த மோசடியாக இருக்கும் என குப்பனுக்குத் தோன்றியது.

குப்பன் அவ்வூரின் கிராம அதிகாரியிடம் நடந்ததை கூறி அதில் இருளப்பன் சம்பந்தப்பட்டி ருக்கலாம் என்ற சந்தேகத்தையும் கூறினான். கிராம அதிகாரியும் குப்பன் கூறியதைக் கேட்டு உடனே இரண்டு பேர்களை இருளப்பனைக் கண்காணிக்க அனுப்பினார்

அன்று இரவு இருளப்பன் தன் கூட்டாளி களான இருவரை சந்திக்க சென்றான். அந்த இருவர் தாம் பணக்கார வியாபாரியாகவும் பொற்கொல்லனாகவும் வந்து குப்பனையும் சுப்பனையும் ஏமாற் றியவர்கள். மூவரும் பணத்தை பங்கு போட்டுக் கொண்டிருக்கை யில் கிராம அதிகாரியின் ஆட்கள் அவர்களை கையும் களவுமாகப் பிடித்துக் கொண்டு போனார்கள்.

இருளப்பன் தன் குற்றத்தை கிராம அதிகாரியிடம் ஒப்புக் கொண்டு குப்பனுக்கும் சுப்பனுக் கும் அவர்களை ஏமாற்றி வாங்கிய பணத்தையும் கொடுத் தான். குப்பன் தன் மனைவியிடம் பணம் திரும்ப கிடைத்த விதத்தைக் கூறவே ''நீங்கள் கெட்டிக்காரர் என்றும் இந்த மோசடியை எப்படியும் கண்டுபிடித்து விடுவீர்கள் எனக்குத் தெரியும்'' என்றாள். சுப்பன் இதைக் கேட்டு ''குப்பன் தான் எவ்வளவு கெட்டிக்காரன்! " என்று எண்ணிய வாறே சென்றான்.





# அதிசயப் பரீட்சை

வீரசேனனின் அமைச்சர் வித்தியா நாதர் வயதான காரணத்தால் பதவி விலக விரும்பினார். தம் எண்ணத்தை அவர் மன்னனிடம் சொன்னபோது மன்னனும் ''உங்கள் மூன்று மைந்தர்களும் உங்களை போல அறிவில் சிறந்தவர்கள்தாமே. உங்கள் மூத்த மகனுக்கே உங்கள் பதவியைக் கொடுக்கலாமென நினைக்கிறேன்' என்றான்.

வித்திய நாதரும் '' அமைச்சரை நியமிக்கும் விஷயத்தில் அவசரப் படக்கூடாது. நிதானமாக யோசித்து முடிவு செய்ய வேண்டும். தைரிய சாலியான அமைச்சர் வேண்டுமென்றால் என் மூத்த மகனை நியமியுங்கள். புத்திசாலியான அமைச்சராக வேண்டுமானால் என் இரண்டாவது மகனைத் தேர்ந்தெடுங்கள். நேர்மையானவனை நியமிக்க விரும்பினால் என் மூன்றாவது மகனை நியமிக்கலாம்'. மூவருக்கும் ஒரு செய்தியை அனுப்புகிறேன். ஒவ்வொருவனும் எப்படி செயல்படுகிறான் என்று பாருங்கள்'' என்றார்.

மறுநாள் அமைச்சர் தன் மூன்று புதல்வர்களையும் அழைத்து ''நான் சொல்வதைக் கவனமாகக் கேளுங்கள். இது மிக முக்கியமான விஷயம். அரசரின் பூங்காவில் மிகவும் அபூர்வ ரக ரோஜாச்செடி ஒன்று உள்ளது. நீங்கள் அங்கு போய் ஆளுக்கு ஒரு ரோஜா மலரைப் பறித்து வரவேண்டும். இது மிகவும் ஆபத்தான வேலை. ஏனெனில் அச்செடியின் மலர்களை யாரும் பறிக்கக் கூடாது என்பது அரச கட்டளை. எனவே நீங்கள் அதனைப் பறிக்கும் போது அதனைக் காவல் காக்கும் வீரர்களிடம் அகப்பட்டுக் கொண்டால் உங்கள் வாய்த் திறனைக் காட்டி தண்டனை பெறாமல் தப்பித்துக்

காரை. குருமூர்த்தி

கொள்ள வேண்டும். இதை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்'' என்று கூறினார்.

மூவரும் அவர் கூறியபடியே செய்வதாகக் கூறி அவரை வணங்கி விட்டுச் சென்றார்கள். அவர்கள் மூவரும் பூங்காவில் என்ன செய்யப் போகிறார்கள் என்பதை மன்னன் மறைந்திருந்து பார்க்கலானான். மூவரும் மாலை வேளையில் பூங்காவிற்குள் பூனை போல நடந்து சென்று அந்த அபூர்வ ரோஜாச் செடியை அணுகினார்கள். அவர்கள் ஆளுக்கு ஒரு மலரைப் பறித்துக் கொண்டு திரும்பியபோது பூங்காவைக் காவல் காக்கும் வீரர்களிடம் அகப்பட்டுக் கொண்டனர்.

அமைச்சரின் மூத்த மகன் தன்னைப் பிடித்த காவலாளியை பயமுறுத்த பலமாகக் கத்தி அவன் பயந்து நிற்கையில் அவனது கையைக் கடித்து விட்டு, அவனிடமிருந்து விடுபட்டுத் தப்பி ஓடிவிட்டான். இரண்டாவது மகன் ரோஜா மலரைத் தன் வாய்க்குள் போட்டுமென்று தின்று விட்டுக் காவலாளியிடம் தான் மலரை ஒன்றும் பறிக்கவில்லை என அப்பாவிபோல நடித்துத் தப்பிச் சென்று விட்டான்.

ஆனால் மூன்றாவது மகன் மட்டும் எங்கும் போகாமல் அமைதியாக நின்றான். காவல் வீரர்கள் அவனை மன்னன் முன் கொண்டு போய் நிறுத்தினார்கள். அவன் மன்னனை வணங்கி ''அரசே! இந்த மலரைப் பறிக்கக் கூடாதெனச் சட்டம் இருப்பது எனக்குத் தெரியும். ஆனால் இந்த வேலையை நான் செய்ய வேண்டுமென்று என்னிடம் கூறியது தங்கள் மதியூக அமைச்சர்தான். அவர் அவ்வாறு கூற ஏதோ தக்க காரணம் இருக்க வேண்டும்'' என்றான்.

அப்போது அங்கு வந்த அமைச்சர் ''பார்த்தீர்களா! மூவரும் தங்கள் தங்கள் இயல்பிற்கு ஏற்ப நடந்திருக்கிறார்கள். ஒருவன் வன்முறையில் இறங்கினான். இன்னொருவன் தன்னறிவைப் பயன்படுத்தினான். மூன்றாமவன் நேர்மையைக் கடைப் பிடித்தான்'' என்றார்.

மன்னனும் புன்னகை புரிந்து ''தாங்கள் மூன்று புதல்வர்களும் கெட்டிக்காரர்களே, தங்கள் மூத்த மகனை சேனாதிபதியாகவும் இரண்டாவது மகனை அந்தரங்க ஆலோசகனாகவும் நியமிக்கிறேன். நேர்மையைக் கடைப்பிடிக்கும் உங்கள் மூன்றாவது மகனுக்கே அமைச்சர் பதவி''. என்றான். கிழ அமைச்சரும் மிகவும் சரியான முடிவு'' எனக் கூறினார்.



50. போருக்கான ஏற்பாடு

# மகாபாரதம்

கிருஷ்ணர் அருளிய திவ்விய திருஷ்டியால் அவரது விஸ்வரூபத்தை திருதராஷ்டிரன் ஆவலுடன் பார்த்தான். அதன்பின் அவன் கிருஷ்ணரிடம் ''தேவாதி தேவா! மிகுந்ததயையுடன் நீங்கள் எனக்கு திவ்விய திருஷ்டி கொடுத்தீர்கள். அதனை நீங்கள் திரும்பப் பெற்றுக் கொள்ளுங்கள் இதனால் உங்கள் விஸ்வரூபத்தை பார்த்த பிறகு எந்த சாதாரண மனிதனையும் இவ்வுலகையும் பார்க்க நான் விரும்பவில்லை'' என்றான்.

மறுநிமிடமே அந்த சபை எப்போதும் இருப்பது போலாகியது கிருஷ்ணரும் முன்போலாகிவிட்டார். ரிஷிகளுடன் வருவதாகக் கூறி கிருஷ்ணர் சாத்தியகியையும் விதுரரையும் அழைத்துக் கொண்டு அச்சபையிலிருந்து வெளியேறினார். அவரைக் கௌரவர்களும் மற்ற அரசர்களும் பின் தொடர்ந்தாலும் கிருஷ்ணர் அவர்களைப் பாராமல் கோபத்தோடு சென்று தலை வாசலை அடைந்தார்.

அங்கு தாருகன் ரதத்தோடு தயாராக நின்று கொண்டிருந்தான். கிருஷ்ணர் ரதத்தில் ஏறி அமர்ந்ததும் திருதராஷ்டிரன் அவரிடம் ''கிருஷ்ணா! என்னைத் தவறாக புரிந்து கொள்ள வேண்டாம். பாண்டவர்களை நான் வெறுக்கவில்லை. நான் துரியோதனனுக்குக் கூறிய அறிவுரைகளை நீங்களே கேட்டீர்களே! சபையோர்களும் கேட்டார்களல்லவா?'' என்று கூறினான்.

கிருஷ்ணர் பீஷ்மரையும், துரோணரையும் கிருபரையும்





பார்த்து "பெரியோர்களே! சபையில் நடந்ததை எல்லாம் நீங்களும் பார்த்தீர்களே, துரியோதனன் கோபத்தோடு சபையை விட்டு வெளியேறினான். திருதராஷ்டிரனோ தன்னால் எதுவும் செய்ய முடியாது என்று கூறிவிட்டான். அதனால் நான் வந்த வேலையும் முடிந்து விட்டது. எனக்கு விடை கொடுங்கள். நான் போய் வருகிறேன்'' என்று கூறினார்.

அவர்களும் கிருஷ்ணரை வழியனுப்பிவிட்டுத் தம் இல்லங்களுக்குச் சென்றார்கள். கிருஷ்ணர் குந்தியின் இல்லத்திற்கும் சென்றார். அவர் குந்தியிடம் கௌரவர்களின் சபையில் நடந்ததை எல்லாம் கூறி "யார் என்ன சொன்னாலும் துரியோதனன் கேட்கவில்லை. எனவே இனி போர்தான். நான் பாண்டவர்களைப் பார்க்க போய் கொண்டிருக்கிறேன். அவர்களிடம் ஏதாவது சொல்ல வேண்டுமா?'' என்று கேட்டார்.

குந்திதேவியும் "பாண்டவர்கள் க்ஷத்திரியதர்மத்தைக் கடைபிடிக்க வேண்டும். குபேரன் முன்பு முசுகுந்தனுக்கு பூமண்டலம் முழுவதையும் கொடுப்பதாகக் கூறினான். ஆனால் ராஜரிஷியான முசுகுந்தனோ தன் புஜபலத்தால் வெல்லும் நாட்டையே தான் ஆளவிரும்புவதாகக் கூறிவிட்டான். யுதிஷ்டிரன் இப்போது தர்மம் நியாயம் என்று கூறிக் கடைப் பிடிக்கும் வழிசரியல்ல. அவன் யாகம் தானம் தவம் என்று செய்வதோடு நின்றுவிடாமல், வீரதீரபராக்கிரமும் கொண்டவனாக இருக்க வேண்டுமென்றே நான் விரும்புகிறேன். நாட்டை நேர்மை தவறாது ஆள்வது க்ஷத்திரியனின் கடமை பாண்டவர்கள் தம் தந்தையின் நாட்டை மீண்டும் பெற்று விட வேண்டும. இதுதான் யுதிஷ்டிரனின் தலையாய கடமை என்று கூறு'' என்றாள். பிறகு அவள் கிருஷ்ணரை வழியனுப்பினாள்.

கிருஷ்ணர் குந்தியிடம் விடை பெற்ற பின் கௌரவர்களைச் சந்தித்து அவர்களிடமும் விடை பெற்றுக் கொண்டார். அப்போது அவர் கர்ணனை அழைத்துத் தன் தேரில் உட்கார வைத்து கொண்டு கிளம்பினார். தேர் நகரைத் தாண்டி ஜனநடமாட்டமில்லாத இடத்தை

அடைந்ததும் தனியாகக் கர்ணனை அழைத்துப் போய் அவனிடம் ''கர்ணா! நீ தர்ம சாஸ்திரங்களை நன்கு கற்றவன். கன்னிப் பெண் ஒரு குழந்தையைப் பெற்றால் அதை உலகம் ஏற்பதில்லை. அந்த கன்னியை மணம் செய்து கொண்டவன் தான் அக் குழந்தைக்கும் தந்தையாகிறான். கன்னியாக இருக்கையில் குந்தி உன்னைப் பெற்றெடுத்தாள். எனவே நீ பாண்டு மன்னனின் மூத்த மகன். மன்னனாகும் உரிமை உனக்குத் தான். பாண்டவர்கள் உன் சகோதர்கள். அவர்களுக்கு உதவ வந்துள்ள மன்னர்கள் உன்னை மன்னனாக ஏற்பார்கள். உன்னை மதித்து வணங்குவார்கள். உனக்குப் பட்டாபிஷேகம் நடக்கும். யுதிஷ்டிரன் இளவரசுப் பட்டம் பெறுவான்'' என்றார்.

கர்ணனும் ''கிருஷ்ணா! என் பால் அன்பு காட்டிக் கூறியதை எல்லாம் கேட்டேன் நான் பாண்டவ என அழைக்கப்படுவதில் சற்றும் ஐயப்படவில்லை. குந்திதேவி என்னைப் பெற்று ஆற்றில் விட்டு விட்டபோது அதிரதன் என்ற தேரோட்டி என்னைக் கண்டெடுத்து தன் மனைவியான ராதையிடம் கொடுத்தான். கஷ்டப்பட்டு என்னை வளர்த்த அத் தம்பதியினருக்கு நான் செய்ய வேண்டிய கடமைகளைச் செய்ய வேண்டாமா? எனக்கு நாமகரணம், ஜாதகரணம் ஆகியவற்றைச் செய்தவர்களும் அவர்களே. அவர்களது உறவில்தான் நான் திருமணமும்



செய்து கொண்டிருக்கிறேன். பதிமூன்று ஆண்டுகளாக திருதராஷ்டிரரின் மாளிகையில் துரியோதனனோடு இருந்து ராஜ போகங்களை அனுபவித்து வருகிறேன். என்னை நம்பித் தான் துரியோதனன் பாண்டவர்களுடன் போர் புரியப் போகிறான். பணத்தாசையாலோ அல்லது பயத்தாலோ நான் துரியோதனனுக்கு துரோகம் செய்ய மாட்டேன். நான் அர்ஜுனனோடு போர் புரிந்தே தீர்வேன். உங்களது உதவியைப் பெறுவதால் பாண்டவர்கள் தாம் போரில் வெற்றி பெறுவார்களென்பது எனக்கு நன்கு தெரியும், நான் அவரது அண்ணன் என்பது தருமருக்குத் தெரிந்தால் அவர் நாட்டைக் கோரவே மாட்டார். நானோ நாட்டை



எல்லாம் துரியோதனனுக்கே கொடுக்க வேண்டுமென நினைப்பவன். நான் பாண்டவர்களை இகழ்ந்து பேசியே வந்திருக்கிறேன். எனவே என்னோடு போர் புரியத் தயாராக இருக்கும்படி அர்ஜுனனிடம் கூறுங்கள்,, என்றான்.

அது கேட்டு கிருஷ்ணர் சிரித்து "உனக்கு நாடாளும் ஆசை கிடையாது என்பது சரியே, இன்னும் ஒரு வாரத்தில் போர் வரப் போகிறது. அன்று போரை ஆரம்பிக்கும்படி பீஷ்மரிடமும், துரியோதனனிடமும் கிருபரிடமும் நான் சொன்னதாகச் சொல். நீயும் போருக்குத் தயாராகு'' என்று கூறினார்.

கர்ணன் கிருஷ்ணரை வணங்கி விடைபெற்றுக் கொண்டான். அவன் அங்கிருந்து திரும்பிச் செல்ல, கிருஷ்ணர் தம் ரதத்தில் உபப்லவத்திற்குச் சென்றார்.

குந்திதேவியும் போரில் பீஷ்மர் துரோணர் போன்ற பெரியோர்கள் இறந்துவிடப் போகிறார்களே என்று எண்ணி மனம் கலங்கினாள். தன் புதல்வர்கள் தம் உறவினர்களை எல்லாம் கொன்று விட்டு நாட்டை அடைவதை விட அவர்கள் ஏழைகளாகவே வாழ்ந்து கொண்டிருப்பதே மேலென எண்ணினாள். வரப்போகும் ஆபத்திற்கு மூல காரணம் கர்ணன் என்றும், தன் மகன்களை வெறுத்து போரில் அவர்களைக் கொல்ல அவன் துடித்துக் கொண்டிருக்கிறான் என்றும் அவள் நம்பினாள். எனவே அவன் மனதைப் பாண்டவர்கள்பால் திருப்ப எண்ணி கங்கைக் கரையில் கர்ணன் ஜெபம் செய்து கொண்டிருக்கும் இடத்திற்குச் சென்றாள்.

கர்ணன் ஜெபம் செய்து கொண்டிருந்த இடத்தைக் குந்திதேவி அடைந்தபோது அவன் ஜெபத்தை முடிக்கவில்லை. அவன் ஜெபத்தை முடிக்கும்வரை குந்திதேவி காத்திருந்தாள். கர்ணன் ஜெபத்தை முடித்துக் கொண்டு திரும்பிப் பார்த்தான். அங்கு குந்திதேவி நின்று கொண்டிருப்பதைக் கண்டு. ''அம்மா! கர்ணன் நான் தங்களை வணங்குகிறேன். என்னைக் காண என்ன வேலையாக வந்தீர்களோ.'' என்று பணிவுடன் கேட்டான்?.

குந்தியும் ''கர்ணா! நீ என் மகன். நீ ராதையின் மகன் அல்ல. உன்

தந்தை தேரோட்டி அதிரதனும் அல்ல. நான் சொல்வது உண்மை இதை நம்பு. நீ உன் தம்பிகளை விரோதித்துக் கொண்டு துரியோதனன் சொல்கிற பாவச் செயல்களையெல்லாம் செய்து வருகிறாய். இது முறையல்ல. பாண்டவர்களின் நாட்டை கௌரவர்கள் பிடுங்கிக் கொண்டார்கள். நீ அதைத் திருதாஷ்டிரனின் புதல்வர்களிடமிருந்து வாங்கி நீயே ஆட்சி புரிந்துவா. பலராமனும் கிருஷ்ணனும் இருப்பதைப் போல நீயும் அர்ஜுனனும் பாசத்துடன் இருங்கள். நீங்கள் இருவரும் ஒன்று சேர்ந்து விட்டால் உங்களால் முடியாதது என்று எதுவுமே இல்லை" என்றாள்.




கர்ணனும் ''அம்மா! நீங்கள் சொல்வதை நான் ஏற்க முடியாது. நீங்கள் எனக்கு பெருத்த அநியாயம் செய்து விட்டீர்கள். நான் பிறந்ததும் என்னை ஆற்றில் விட்டு விட்டீர்கள். நான் க்ஷத்திரியனாகப் பிறந்திருந்த போதிலும் ஒரு தேரோட்டியின் மகனாகவே வாழ்ந்து வரவேண்டியதாயிற்று இவ்வளவு நாட்களாக நீங்கள் என்னைப் பற்றிக் கவலைப் படவில்லை. இப்போது இங்கு வந்து அறிவுரை கூறுகிறீர்கள். இது என் நன்மையைக் கருதி அல்ல. உங்கள் சுயநலத்திற்காகத்தான். நான் இப்போது பாண்டவர்கள் பக்கம் சேர்ந்தால் பயந்து போய்ச் சேர்ந்ததாகத்தான் உலகம் என்னைத் தூற்றும். போர் ஆரம்பமாகும் போது நான் தான் பாண்டவர்களின் அண்ணன் என்று கூறினால் என்னைப் பற்றி எப்படியெல்லாம் மதிப்பிடுவார்கள்? திருதராஷ்டிரனின் புதல்வர்கள் என்னை ஆதரித்து எப்படியெல்லாம் உபசரித்தார்கள். அவையாவும் வீண் என்று சொல்லச் சொல்கிறீர்களா? என்னை முழுக்க முழுக்க நம்பித் தானே அவர்கள் போரில் இறங்கப் போகிறார்கள். நான் என் உயிரைக் கொடுத்தாவது நன்றிக் கடன் செலுத்த வேண்டும். நீங்களோ உங்கள் மைந்தர்களைப் பற்றிக் கவலை கொண்டு என்னிடம் வந்திருப்பதால் உங்களை ஏமாற்றத்துடன் அனுப்ப நான் விரும்பவில்லை. பாண்டவர்களில், அர்ஜுனனைத்தவிர மற்ற

யாரையும் போரில் கொல்ல மாட்டேன். அர்ஜுனனைக் கொன்றால் தான் என் பராக்கிரமம் எவ்வளவு என்று உலகினருக்குத் தெரிய வரும்''. என்றான்.

குந்தி தன் துக்கத்தை வெளிக் காட்டாமல் சிரமப்பட்டு அடக்கிக் கொண்டு ''கர்ணா! இதுதான் விதியின் விளையாட்டு என்பது. கௌரவர்கள் அழிய வேண்டுமென்று இருக்கிறது. நீ மட்டும் எனக்குக் கொடுத்தவாக்கை மறந்துவிடாதே. உனக்கு நன்மை உண்டாகட்டும்'' எனக் கூறி வாழ்த்தினாள். கர்ணனும் அவளது காலடியில் விழுந்து வணங்கி விட்டுத் தன் இல்லத்திற்குச் சென்றான். குந்திதேவியும் அங்கிருந்து சென்றாள்.

கிருஷ்ணர் உபப்லவத்தை அடைந்ததும் பாண்டவர்களைக் கண்டு கௌரவ சபையில் நடந்ததைக் கூறினார். பின்னர் அங்கிருந்து தன் விடுதிக்குச் சென்று அவர் ஓய்வு எடுக்கலானார். அன்றிரவு பாண்டவர்கள் கிருஷ்ணருடன் போருக்கான ஆயத்தங்கள் பற்றி விவாதித்தார்கள். பாண்டவர்களிடம் ஏழு அட்சௌஹினி சேனை இருந்தது. ஒவ்வொரு அட்சௌஹினிக்கும் படைத்தலைவர் நியமிக்கப்பட்டார். விராடன், துருபதன், திருஷ்டத்யும்னன், சிகண்டி, சாத்தியகி சேகிதானன், பீமன் ஆகியோர் அந்த ஏழுப் படைத்தலைவர்கள். இவர்கள் யாவருக்கும் ஒரு பொதுப் படைத் தலைவராக இருக்க வேண்டுமே. அது பற்றி தருமர் கிருஷ்ணரிடம் கேட்ட போது அவர் திருஷ்ட்த்யும்னனை அப்பதவியில் நியமிக்கும்படிக் கூறினார்.

இந்த நியமனத்தை எல்லா அரசர்களும் மகிழ்ச்சியுடன் வரவேற்றார்கள். போருக்கான ஏற்பாடுகள் விறுவிறுப்புடன் செய்யப்பட்டன.

படை கிளம்புமுன் பூஜைகள், தான தர்மங்கள் என்று எல்லாம் முறைப்படி நடந்தன. கிருஷ்ணர், தருமர், அர்ஜுனன், சாத்தியகி ஆகியோரும் படையுடன் சென்றனர்.

இந்த மாபெரும் படை குருக்ஷேத்திர மைதானத்தை அடைந்தது.





# உயில் கூறுவது இது!

வெகுகாலத்திற்கு முன் மணி முத்தாற்றின் கரையில் தங்கமுத்து என்ற பரம ஏழை வசித்து வந்தான். அவனது பெயரில் தான் தங்கமும் முத்தும் இருந்ததேயொழிய அவனிடம் செப்பாலடித்த ஒரு காசு கூட இருக்கவில்லை. பணம் சம்பாதிக்க அவன் செய்த முயற்சிக ளெல்லாம் வீணாகவே, அவன் வாழ்க்கை மீது வெறுப்படைந்து ஒரு நாள் தற்கொலை செய்து கொள்ள முடிவு செய்து கொண்டு ஆற்றில் குதித்து விட்டான்.

ஆனால் அப்போது அவ்வழியே சென்ற ஒரு யோகி அவன் ஆற்றில் குதித்ததைக் கண்டு உடனே தானும் குதித்து அவனை நீரில் மூழ்க விடாமல் தடுத்துக் காப்பாற்றிக் கரைக்குக் கொண்டு வந்து சேர்த்தார். அதன் பிறகு அவர் அவனிடம் ''ஏனப்பா நீ தற்கோலை செய்து கொள்ள முயன்றாய்?'' என்று கேட்டார்.

தங்கமுத்துவும் தான் பணம் சம்பாதிக்க முடியாது போனதை விவரமாகக் கூறினான். யோகியும் ''கவலைப்படாதே. உனக்கு ஒரு தாயத்து கொடுக்கிறேன். அதை நீ கையில் கட்டிக் கொண்டால் உனக் குப் பணம் நிறையக் கிடைக்கும்'' என்று கூறித் தாயத்தைக் கொடுத்து விட்டுச் சென்றார்.

தாயத்தின் மகிமையாலோ அல்லது தன்நம்பிக்கை கொண்ட தாலோ என்னவோ தங்கமுத்து ஆரம்பித்த எந்த வேலையிலும் லாபமே கிடைத்து வந்தது. அவன் தொட்டதெல்லாம் பொன்னா கியது. விரைவிலேயே அவ்வூரிலே யே மிகப் பெரிய பணக்காரனாகி விட்டான். அவனுக்கு ஏராளமாகப் பணம் சேர்ந்து விடவே பல

—பாபநாசம் சாமா—

இடங்களில் வயல்களையும் வீடு களையும் வாங்கிப் போட்டான்.

இவ்வளவையும் பார்த்துக் கொள்ள தங்கமுத்துவால் முடியாது போனதால் ஒரு கணக்குபிள்ளை யை நியமித்தான். அந்தக் கணக்குப் பிள்ளையின் மேற்பார்வையில் தான் தங்கமுத்து வாங்கிய வயல்களும் வீடுகளும் இருந்தன.

வருடங்கள் கழிந்தன. முதலில் தங்கமுத்துவின் மனைவி இறந்தாள். அதன்பிறகு தங்கமுத்து உடல்நலம் குன்றி படுத்து விட்டான். இனி தான் பிழைக்க முடியாது என நினைத்துத்தனக்குப் பிறகுத் தன் ஒரே மகனுக்கு நல் வாழ்வு அமைய ஏற்பாடு செய்ய வேண்டுமென அவன் எண்ணினான். எனவே ஊர் பிரமுகர்கள் நான்கு பேர்களைக் கூப்பிட்டு தன் உயிலை எழுதி அவர் களை சாட்சிகளாகக் கையொப்பம் போடவைத்தான். அந்த உயிலின் படி அவனுடைய மகனான சிறுவன் பெரியவனாகும் வரை அவனது கணக்குப் பிள்ளை வளர்க்க வேண்டுமென்றும் அச்சிறுவன் பெரியவனானதும் கணக்குப் பிள்ளைக்கு இஷ்டமானதை தன் மகனுக்குக் கொடுக்க வேண்டும் என்றும் மீதி அவருக்கே என்றும் எழுதப்பட்டது.

இது கண்டு சாட்சி போட்ட பிரமுகர்கள் ஆச்சரியப் பட்டார்கள். உயிலை எழுதி வைத்தபின் சில நாட்களில் தங்கமுத்து இறந்து போனான்.

தங்கமுத்துவின் மகன் வளர்ந்து



பெரியவனானான். அவன் கணக்குப் பிள்ளையிடம் ''என் சொத்தை எனக்குக் கொடுங்கள்'' என்றான். கணக்குப்பிள்ளையும் ''உயிலின் படி எனக்கு இஷ்டமானது எதுவோ அதைக் கொடுக்க வேண்டுமென்று உன் தந்தை எழுதி இருக்கிறார். உன் தந்தை ஒரு தாயத்தால் தான் முன்னுக்கு வந்தார். உன் தந்தையின் சொத்திலிருந்து அதை மட்டும் உனக்குக் கொடுக்க இஷ்டப்படு கிறேன். மீதி எல்லாம் உன் தந்தை யின் உயிலின்படி எனக்குத் தான்'' என்று கூறிவிட்டான்.

தங்கமுத்துவின் மகன் அதைக் கேட்டுத் திகைத்துப் போனான். இது அநியாயமென்று கூவினான். கணக் குப் பிள்ளையோ ''அநியாயமென் றால் நீதி மன்றத்திற்குப் போய் முறையிடு'' எனக்கர்வத்தோடு



செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலாதார்.

–திருக்குறள்

கூறினான். தங்க முத்துவின் மகனும் நீதி மன்றத்தில் கணக்குப் பிள்ளையின் செயல் அநியாயம் எனக் கூறி முறையிட்டான். தன் தந்தை எழுதி வைத்த உயிலையும் அவன் நீதிபதியிடம் கொடுத்தான்.

நீதிபதி தங்கமுத்துவின் மகன் கூறியதைக் கேட்டு விட்டு அவன் கொடுத்த உயிலைப் படித்துப் பார்த்தார். புன்னகை புரிந்தவராய் அவர் உடனே கணக்குப்பிள்ளயை வரவழைத்து விசாரித்தார். அவனும் "இந்த உயில் உண்மையானது தான். நான் இவனுக்குக் கொடுக்க இஷ்டப்படுவது இந்த தாயத்து தான். எனவே இதை இவனுக்குக் கொடுத்துவிட்டு சொத்தில் மிகுந்த பாகத்தை உயிலின்படி நான் வைத்துக் கொள்கிறேன்'' என்றான்.

நீதிபதியும் கணக்குப் பிள்ளையிடம் ''நீ தாயத்தை மட்டும் தங்க முத்துவின் மகனுக்குக் கொடுக்கப் போகிறாய். மீதமுள்ள சொத்து உனக்கு இஷ்டமானது தானே'' என்று கேட்டார்.

கணக்குப்பிள்ளையும் ஆமாம் எனவே நீதிபதியும் ''உயிலின்படி உனக்கு இஷ்டமானதை தங்கமுத்துவின் மகனுக்குக் கொடுக்க வேண்டும். தாயத்து போக மீதமுள்ளது உனக்கு இஷ்டமானது. எனவே அதை தங்கமுத்துவின் மகனிடம் ஒப்படைக்க வேண்டும். அப்போது மீதமுள்ளது தாயத்து ஒன்று தான். அதை நீ வைத்துக் கொள். இது தான் என் தீர்ப்பு'' என்றார்.

ஊரார் சரியான தீர்ப்பு எனக் கூறி மகிழ்ந்தார்கள்.





# கண்ணன் என் அண்ணன்

சிறுவன் கண்ணனின் தந்தை இறந்து விடவே அவனது தாய் அவனை வளர்க்கச் சிரமப்பட்டாள். தன் வீட்டைச் சுற்றியுள்ள இடத்தில் காய் கறிகள் பயிரிட்டு அவற்றை விற்றும், இராட்டையில் நூல் நூற்றுக் கூலி பெற்றும் எப்படியோ குடும்பத்தை நடத்திவந்தாள். அவள் தன் வாழ்க்கையில் இரு செயல்களைத் தன் முக்கிய கடமையாகவே கருதினாள். ஒன்று கிருஷ்ண பகவானை எப்போதும் பிரார்த்திப்பது. மற்றது தன் மகன் கண்ணனை நல்ல விதமாய் வாழ வழி செய்வது. அவள் தன் மகன் கண்ணனை கவனித்துக் கொள்வது போல பகவான் கிருஷ்ணருக்கும் சேவை செய்து வந்தாள்.

கண்ணனைப் பள்ளிக் கூடத்தில் சேர்க்கும் வயது வந்தது. அவ்வூரில் பள்ளிக்கூடம் இல்லாததால் கொஞ்சதூரத்திலுள்ள ஊர்ப்பள்ளிக் கூடத்தில்தான் சேர்க்க வேண்டியதாயிற்று. அவனது ஊரிலிருந்து அந்த ஊர்ப்பள்ளிக்கூடத்திற்குப் போக வேண்டுமென்றால் இடையிலுள்ள ஒரு பெரிய காட்டின் வழியே செல்ல வேண்டும். கண்ணன் அக்காட்டு வழியே செல்ல பயப்படவே அது கண்டு அவனது தாயார் '' கண்ணா! பயப்படாதே. காட்டில் உன் அண்ணன் கண்ணன் இருக்கிறான் . நீ சின்னக் கண்ணன் அவன் பெரிய கண்ணன். நீ காட்டில் நுழைந்ததும் 'அண்ணா கண்ணா' என்று உரத்த குரலில் கூப்பிடு. அவன் உனக்குத்துணையாக வழிநெடுக வருவான்''. என்று கூறி தைரியம் அளித்தாள்.

கண்ணனும் ''அப்படியா! இது நாள் வரை எனக்குத் தெரியாதே. அண்ணன் காட்டில் என்ன செய்கிறான்?'' என்று கேட்டான். அவனது தாயாரும் ''காட்டில் அவன் மாடுகளை மேய்த்துக் கொண்டும் புல்லாங்குழல் ஊதிக்



கொண்டும் இருப்பான்'' என்றாள்.

மறுநாள் கண்ணன் காட்டில் போகும் போது தன் அண்ணன் எங்காவது இருக்கிறானா என்றும் புல்லாங்குழல் இசை கேட்கிறதா என்றும் கவனிக்கலானான். எங்கோ குழலின் நாதம் கேட்கவே உடனே கண்ணன் ''அண்ணா! கண்ணா! நான் உன் தம்பி. சின்னக் கண்ணன் வந்திருக்கிறேன். காட்டில் தனியாகப் போக பயமாக இருக் கிறது. துணைக்கு என்னுடன் வா'' என்று உரக்கக் கூவினான்.

மறுநிமிடமே கையில் புல்லாங் குழலுடன் கண்ணனைவிடச் சற்றுப் பெரியவனான சிறுவன் ஒருவன் அவன் முன் வந்து நின்றான். கண்ணன் அவனுடன் பேசியவாறே காட்டைக் கடந்தான். அப்போது அச்சிறுவன் கண்ணனிடம் ''இதோ பார்! எனக்கு தினமும் பல வேலைகள் இருக்கும். அதனால் தினமும் என்னைக் கூப்பிடாதே. இந்தக் காட்டில் நான் இருப்பதால் பயமில்லாமல் நீ போகலாம். மிக மிக அவசியம் என்றால் மட்டும் என்னைக் கூப்பிடு. அப்போது நான் உடனேயே வந்து உனக்கு உதவுவேன்'' என்றான்.

கண்ணனும் ''சரி, நீ காட்டில் இருப்பதால் இனி எனக்கு பயமே இல்லை. ஆனால் எப்போதாவது நான் விளையாடக் கூப்பிட்டால் நீ வருவாயா?'' என்று கேட்டான். அச் சிறுவனும் ''ஓ! தாராளமாக வருவேன்'' என்று கூறிவிட்டுச் சென்றான். அன்று மாலை வீட்டிற்குச் சென்றதும் கண்ணன் தன் தாயாரிடம் தான் அண்ணனைச் சந்தித்த விவரத்தைக் கூறினான். அது கேட்டு கிருஷ்ண பகவான்தான் தன் மகனுக்கு உதவி இருப்பார் என்று எண்ணி அவள் மகிழ்ந்து போனாள்.

கண்ணன் காட்டிற்குப் போய் ''அண்ணா'' என்று கூப்பிட்டால் பெரிய கண்ணனான அச்சிறுவன் வந்து அவனுடன் சற்று நேரம் விளையாடிவிட்டு செல்வான். இப்படியே சில நாட்கள் கழிந்தன. ஒரு முறை கண்ணனின் பள்ளி ஆசிரியர் தன் தந்தையின் வருடாந்திர திவசம் செய்ய வேண்டுமென்று கூறவே மாணவர்

கள் தம் வீடுகளிலிருந்து அரிசி, பருப்பு, எண்ணெய், பணம் என்று கொண்டு வந்து அவருக்குக் கொடுத் தனர். கண்ணனோ. ஆசிரியருக்குக் கொடுக்கத் தன் வீட்டில் எதுவும் இல்லையே என்று எண்ணிக் கவலைப்படலானான்.

அன்று காலை அவன் வழக்கம் போலப் பள்ளிக் கூடத்திற்குப் போகும் போது அவனது அண்ணனான சிறுவன் அவனைக் கண்டு ''தம்பீ! ஏன் கவலையாக இருக்கிறாய்?'' என்று கேட்டான். கண்ணனும் தன் ஆசிரியருக்கு எதுவும் கொடுக்க இயலாது போவதை விவரமாகக் கூறினான்.

அதைக் கேட்டு அச்சிறுவன் ''இவ்வளவுதானா? நான் ஒரு சட்டி பால் கொடுக்கிறேன். அதைக் கொண்டுபோய் உன் ஆசிரியரிடம் கொடு'' என்று கூறி ஒரு சட்டி நிறையப் பாலை எடுத்து வந்து கண்ணனிடம் கொடுத்தான். கண்ணன் அதை வாங்கிக் கொண்டு மகிழ்ச்சியுடன் தன் ஆசிரியரின் வீட்டிற்குச் சென்றான்.

அவன் ஆசிரியரை வணங்கி தான் கொண்டு வந்த சட்டிப் பாலை அவரிடம் கொடுத்தான். சட்டியை வாங்கிக் கொண்ட ஆசிரியர் உள்ளே எடுத்துப் போய் பாலை ஒரு பெரிய பாத்திரத்தில் விட்டார். அந்தப் பாத்திரம் நிரம்பி விட்டது. ஆனாலும் அந்த சட்டி நிறையப் பால் இருந்தது. உடனே அந்தப்



பாலை ஒரு மிக பெரிய அடுக்கில் ஊற்ற அந்த அடுக்கும் நிறைந்தது. அப்போதும் சட்டி நிறையப் பால் இருந்தது. அதைக் கண்ட ஆசிரியர் ஆச்சரியப்பட்டு அந்த சட்டியைப் பாலுடன் ஒரிடத்தில் பத்திரமாக வைத்தார். பிறகு அவர் கண்ணனை அழைத்து ''கண்ணா! இந்தப் பால் உனக்கு எங்கே கிடைத்தது?'' என்று கேட்டார். கண்ணனும் காட்டி லுள்ள தன் அண்ணன் பெரிய கண்ணனைப் பற்றிக் கூறினான்.

அதைக் கேட்ட ஆசிரியர் ''கண்ணா! என்னை அந்தக் காட்டில் உன் அண்ணன் இருக்கும் இடத்திற்கு அழைத்துச் செல்'' என்றார். கண்ணனும் அவரை அழைத்துக் கொண்டு காட்டிற்குச்



உண்மைக்கே வெற்றி பொய் வெற்றி பெறாது. ரிஷி முனிவர்கள் செல்லும் பாதை உண்மையைக் கடைப்பிடிப்பதே நாம் கடைபிடிக்கவேண்டியதும் இந்த வழியைத்தான். - உபநிஷத்து

சென்றான். அங்கு ஓரிடத்தில் கண்ணன் நின்று ''அண்ணா! என்று உரக்கக் கூவி அழைத்தான். அப்போது பெரிய கண்ணனின் குரல் இவ்வாறு கூறியது ''கண்ணா! உனக்கு இருப்பது போலவே எனக்கும் உன்னோடு விளையாட வேண்டு மென்ற ஆசை உள்ளது. நீ என்னைப் பார்க்க முடிவது போல உன் பக்கத்திலுள்ள ஆசிரியரால் என்னைப் பார்க்க முடியாது. ஏனெனில் அந்தப் பக்குவ நிலையை அவர் இன்னும் அடைய வில்லை. என்னைக் காண அவர் இன்னமும் கொஞ்ச காலம் காத்திருக்க வேண்டும்''

அப்போது கண்ணன் தன் ஆசிரியரிடம் ''என் அண்ணன் சொன்னதைக் கேட்டீர்களா?'' எனக் கேட்கவே அவரும் ''எனக்கு எதுவும் கேட்கவில்லையே'' என்றார். கண்ணனோ ''என் அண்ணன் கூறியதை நான் தெளிவாகக் கேட்டேனே'' என்று சொல்லி தான் கேட் டதை எல்லாம் தன் ஆசிரியரிடம் கூறினான்.

ஆசிரியரும் ஆனந்தக் கண்ணீர் உகுத்தவராய் ''ஆகா! நீதான் எவ்வளவு உயர்ந்தவன்! உன் தாய் பகவானின் மீது கொண்ட அபார நம்பிக்கையால் நீ அவரைக் காணும் பாக்கியம் பெற்றாய். நான் உன்னைப் போல பக்குவ நிலையை அடைந்தாலே பகவானைப் பார்க்க முடியும் என்ற படிப்பினை எனக்கு இன்று கிடைத்தது'' எனக் கூறி மகிழ்ந்தார்.



# மூன்று மாபெரும் குருமார்கள்

சீக்கியர்களின் பெரும் பத்து குருமார்களில் மூவர் ஏப்ரல் மாதத்தில் பிறந்தவர்கள். குரு அங்கத் 1504ல் ஏப்ரல் 23லும், குரு அர்ஜுன் தேவ் 1563ல் ஏப்ரல் 14லிலும் குருதேக் பஹாதுர் 1621ல் ஏப்ரல் 12லும் பிறந்தவர்கள்.

சீக்கிய மதத்தை நிறுவியவர் குருநானக் (1419-1532) அவர் உயிர் நீக்குமுன் தம் இனத்தை வழி காட்டி நடத்திச் செல்ல தம் சீடர்களில் ஒருவரை நியமித்தாக வேண்டுமென எண்ணினார். அவரது சீடர்களில் அவரது இரு புதல்வர்கள் இருந்தும் அவர்களைத் தேர்ந்தெடுக்காமல் தம் சீடர்களில் சிறந்தவர் என அவர் கருதிய அங்கரைத் தேர்ந்தெடுத்தார். குருஅங்கதர் குருநானக் நினைத்ததை நிரூபித்தார்.

## அன்று இதேமாதத்தில் பிறந்தவர்



ஐந்தாவது சீக்கியகுருவான அர்ஜுன் தேவ் நான்காவது சீக்கிய குரு ராமதாஸின் புதல்வர். இவர் தாம் தமக்கு முன் தோன்றிய குருமார்கள் கூறியவற்றை ஒன்று திரட்டி 'ஆதிகிரந்'தாக வெளியிட்டார். இது சீக்கியர்களின் புனித நூல். இதில் ஹிந்து மதத்தத்துவங்களும் இடம் பெற்றுள்ளன.

முகலாய சக்கரவர்த்தி ஜஹாங்கீரின் மகன் குஸ்ரூ தந்தைக்கு எதிராகத் திரும்பிய போது அந்த இளவரசரின் சிரம நிலை கண்டு பரிதாபப்பட்டே குரு அர்ஜுன்தேவ் உதவினார். இதனால் கோபம் கொண்ட ஜஹாங்கீர் குரு அர்ஜுன்தேவைக் கொன்று விட்டார்.

ஒன்பதாவது சீக்கிய குரு தேக் பஹாதுர் மொகலாயச் சக்கரவர்த்தி ஔரங்கஜேப்பின் கோபத்திற்கு ஆளானார். இதற்குக் காரணம் அந்த குரு ஔரங்கஜேப் கஷ்மீர் பிராம்மணர்களுக்கு இழைத்து வந்த கொடுமைகளைக் கடுமையாக எதிர்த்ததுதான். ஔரங்கஜேப் குருவுடன் பேச்சு வார்த்தை நடத்துவதாகக் கூறி அவரை வரவழைத்து கொன்று விட்டார்.

குரு தேக்பஹாதுரின் மகனான குரு கோவிந்த்சிங் துணிச்சலுடன் முகலாய மன்னரின் கொடுமைகளை எதிர்த்துத் தொடர்ந்து போராட்டம் நடத்தும்படி சீக்கியர்களை ஊக்குவித்தார்.



# பாரதநாடு

## அன்றும் இன்றும்



## மும்பை

ஒரு காலத்தில் தனித்தனியாக இருந்த ஏழு தீவுகள் ஒன்றுக்கொன்று இணைந்து பம்பாய் நகரமாகப் பெயர் பெற்று இன்று மும்பை என்று பெயர் மாற்றம் அடைந்துள்ளது. இந்நகரின் காவல் தெய்வம் மும்பாதேவி. அதனால் தான் இப்பெயர் மாற்றம் செய்யப் பட்டுள்ளது.

மும்பையின் வரலாறு பதினாறாவது நூற்றாண்டில் ஆரம்பமாகிறது. கிபி 1510 ல் போர்த்துகீசிய ஜெனரல் அல்புகர்க் வென்று 1534ல் இப்பகுதியின் அதிபதியானான். அப்போது இங்கு எந்த நகரமும் இருக்கவில்லை. சிறு நகரங்களும் வீதிகளும் இத்தீவுகளில் அமைந் திருந்தன. இவை கி.மு.வுக்கு முன் பிருந்தே பல நூற்றாண்டுகளாக அசிரியா, பாரசீகம், ரோமாபுரி ஆகிய நாடுகளுடன் வர்த்தகம் செய்து வந்தன. அல்புகர்க் இப்பகுதியை விலையுயர்ந் ததாக நினைக்கவில்லை. பிரிட்டிஷ் இளவரசர் இரண்டாவது சார்ல்ஸ் போர்த்துகீசிய இளவரசி காதரினை மணந்த போது இப்பகுதி அவருக்கு அன்பளிப்பாக அளிக்கப்பட்டது. அந் நேரத்தில் இப்பகுதியிலிருந்து கிடைத்த வருமானம் பத்துபவுன்களே. சார்ல்ஸ் மன்னன் இப்பகுதி யைக் கிழக்கிந்தியக் கம்பெனிக்கு பத்து பவுன்களுக்கு விற்றுவிட்டார்!

அன்று முதல் இப்பகுதி வேக மாக முன்னேற்றம் அடைந்தது. அன்று பத்து பவுனே மதிப்புபெற்ற இப்பகுதி பம்பாய் என்றாகி உலகிலேயே பெரும் வியாபாரமையங்களில் ஒன்றாக திகழ்வதோடு எவ்வளவோ கோடி



மதிப்புள்ள இடமாக ஆகி விட்டது! நம் நாட்டு வருமானத்தில் முப்பது சதம் மும்பையிலிருந்துதான் கிடைக்கிறது.



நம் நாட்டில் முதலாவது ரயில் வண்டி 1893 ல் பம்பாயிலிருந்து தானா வரை ஓடியது. இங்கு பெரியதுறைமுகம் ஏற்பட்டு முதலில் ஐரோப்பியக் கப்பல்கள் இங்கே வந்தன. இன்று நாட்டில் மிகப் பெரிய துறைமுகம் பம்பாய் தான் முதலாவது இந்திய தேசீய காங்கிரஸ் 1885ல் இந்நகரில்தான் கூடியது. நம் சுதந்திரப் போராட்டங் களின் மையமாகவும் இது விளங்கியது.

இந்த நகர முன்னேற்றத்திற்கு மராட்டியர்களும் குஜராத்தியரும், தென்னிந்தியர்களும், பார்ஸிகளும் முக்கிய காரணமாவர். இங்கு பல நினைவுச் சின்னங்களும் அழகிய கட்டடங்களும் உள்ளன. ஆஸ்டின் சர்ச், கேட் வே ஆஃப் இண்டியா, சக்ரபதி சிவாஜி ரயில்வே சதுக்கம், (விக்டோரியா டெர்மினஸ்), மகாலட்சுமி ஆலயம் முதலியன ஒரு சில புகழ்பெற்ற சின்னங்களாம்.

உலகிலேயே மிக அதிக அளவில் திரைப்படங்கள் இங்கு தயாரிக்கப் படுகின்றன. சுமார் ஒரு கோடியை எட்டிவிட்ட ஜனத்தொகை கொண்ட மும்பை பெரிய அலுவலகங்கள், கல்விஸ்தாபனங்கள், கலை, வியாபார மையங்கள் ஆகிய வற்றை ஏராளமாகக் கொண்டுள்ளது. சிறிய பெரிய தொழில்கள் இங்கு ஏராளமாக நடை பெற்று வருகின்றன. அரபிக் கரையோரமுள்ள அழகிய மெரீன் டிரைவ் கழுத்தில் அணியும் அட்டிகை போல வளைந்துள்ளது. பசுமையான மலபார் ஹில்ஸைக் கொண்ட மும்பை உலகின் அழகிய நகரங்களில் ஒன்றாகக் கருதப்படுகிறது.



# கண்டு பிடியுங்கள் எழுதுங்கள்

இந்த இதழில் வெளியிடப்பட்ட வினாக்களின் விடைகள் அடுத்த இதழில் பிரசுரிக்கப்படும். இதனால் நீங்கள் பாரத தரிசனப் போட்டியின் விடைகளை அனுப்ப லாம். அதற்கான முயற்சியில் நீங்கள் ஈடுபட வேண்டும். இதற்கு முன் வெளியான இதழைக் கவனமாகப் படியுங்கள். அதன் கதை உங்களுக்கு ஏன் பிடித்தது என்பதை 20 வாக்கியங்களில் எழுதி அனுப் புங்கள். உங்கள் வயது, மாணவரானால் கல்வி பயிலும் பள்ளியின் பெயர், வகுப்பு, உங்கள் முழுமுகவரி ஆகியவற்றை யும் எழுதி விடைகளுக்குக்கீழ் நீங்கள் உங்கள் கையொப்பமிட்டு எங்களுக்கு அனுப்ப வேண்டும். உங்கள்கையொப்பமே என உறுதி செய்ய உங்கள் ஆசிரியரோ அல்லது உங்களது தாய் தந்தையரின் ஒருவரது கையொப்ப மோ உடன் இருக்க வேண்டும், விடைகளை ' பாரத தரிசன வாசகர்கள் போட்டி ' சந்தமாமா பில்டிங்ஸ், வடபழனி, சென்னை 600026 என்ற முகவரிக்கு அனுப்ப வேண்டும்.

***முதல் பரிசு ரூ 1000/-***
***இரண்டாவது பரிசு ரூ 500/-***

***மேலும் ஐந்து ஊக்கப் பரிசுகள்.***
***பரிசு ஒவ்வொன்றும் ரூ 200/-***

அம்புலி

பாரத
வாசகர்களு



**பாரத தரிசனம் வாசகர்களுக்குப் போட்டி :**

இளைஞன் ஒருவன் தன் பிரச்சனைக்கு தீர்வுகாண ஒரு முனிவரிடம் போய் யோசனை கேட்டான். அந்த வாலிபன் சொன்னதை பொறுமையுடன் கேட்ட அம்முனிவர் உடனே பதில் ஏதும் கூறாமல் மவுனமாக இருந்தார். முனிவரின் குடிலுக்கு பின்புறத்தில் அவரது மனைவி நீர் எடுத்துக் கொண்டிருந்தாள். முனிவர் தம் மனைவியை கூப்பிடவே அவளும் கிணற்றிலிருந்து இழுத்த குடத்தை பாதியில் விட்டுவிட்டு கணவனைக் காண வந்தாள். அவள் விட்டு வந்த குடம் ராட்டினத்தின் கயிரோடு பாதிக் கிணற்றில் தொங்கிக் கொண்டிருந்தது. எவ்வித ஆதாரமும் இல்லாமல் அந்தரத்தில் தொங்கிய குடத்தைக் கண்டு அந்த இளைஞன் ஆச்சரியப் பட்டான். அந்தப் பெண்மணி கணவரிடம் அன்பு கொண்டவள், நற்குணவதி என்பது மட்டுமல்ல பல அற்புத சக்திகளைப் படைத்தவள் என்று அந்த இளைஞன் தெரிந்து கொண்டான். அந்த முனிவர் யார்? அவரது மனைவியின் பெயர் என்ன?

நம் புராணங் களில் இந்த ஜதைப் பெயர்கள் ஒன்றுக்கு மற்றது எவ்வாறு சம்மந்தப்பட்டது?



# விஞ்ஞானமும் விநோதமும் மிளிற இந்திய

# பரிசுகளை வெல்லுங்கள்






1. அரசியல் பொருளாதார, ராஜாங்க சாஸ்திரங்கள் சம்பந்தப்பட்ட முதன் முதலாவது இந்திய நூல் எது? அதன் ஆசிரியர் யார்?

2. நம் நாட்டு வரலாற்றின் தொடர்பான முதன் முதலான நூல் எது? அதன் ஆசிரியர் யார்?

3. காளிதாசருக்கு முன்பிருந்த புகழ் பெற்ற நாடகாசிரியர் யார்?

4. பாரத நாட்டில் மன்னராக இருந்து யோகியாக மாறிய புகழ் பெற்ற கவி யார்?

5. ராமாயணம் இயற்றப்பட்ட சிறிது காலத்திற்குப் பின் அதில் சேர்க்கப்பட்ட காண்டம் எது?




1. திருராஷ்டின் - காந்தாரம்
2. சாவித்திரி - சால்வன்
3. சகாதேவன் - மத்ரதேசம்
4. கர்ணன் - அங்கதேசம்
5. பப்ருவாகனன் - மணிப்புரி

### நிபந்தனைகள்

1) சந்தமாமா இந்தியாலிமிடெட் நிறுவனத்தில் பணிபுரிபவர்களோ, அத்ன் தொடர்புடையவர்களோ, அவர்களது உறவினர்களோ இப்போட்டியில் கலந்து கொள்ளக்கூடாது.

2) நடுவரின் தீர்ப்பே முடிவானது. இது சம்மந்தமாக கடிதப் போக்குவரத்து கிடையாது.

3) கையெழுத்து தெளிவாக இல்லாவிடைத்தாள்கள் நிராகரிக்கப்படும்.

4) போட்டியின் முடிவுகள் அம்புலிமாமா ஜூலை இதழில் பிரசுரிக்கப்படும்.

5) விடைகள் ஏப்ரல் 30ந் தேதிக்குள் வந்து சேரவேண்டும்.

## மொழிகளில் அம்புலிமாமாவே தனிச்சிறப்பானது




# உலகப் புத்தகச் சந்தை

இன்றைய உலகில் பல திடுக்கிடும் சம்பவங்கள் நிகழ்கின்றன. உலகில் ஓரிடத்தில் போர் மூள்கிறது. மற்றொரு இடத்தில் ஒரு ராணுவத் தளபதி அரசாங்கத்தைக் கவிழ்க்கிறார். படு கொலைகளும் ஆள் கடத்தல்களும் தினந்தோறும் வெளியாகும் செய்திகள்!

ஆனால் இதற்கு மாறாகவும் சில நல்ல பெரும் ஆக்கபூர்வ நடவடிக்கைகளாலும் பலரது வாழ்க்கை அமைதியான முறையில் ஆடம்பர ஆர்பாட்டமில்லாமல் நல்லவிதமாய் அமைந்து வருகிறது. இம்மாதிரியான ஒரு நிகழ்ச்சிதான் பிப்ரவரி 5லிருந்து 13வரை டில்லியில் நடைபெற்ற உலகப் புத்தகச்சந்தையாம்.

இப்புதிய நூற்றாண்டில் இந்தியாவில் உலகப்புத்தகச் சந்தை நடந்தது 14வதாகும். முதலாவது உலகப் புத்தகச் சந்தையில் 1972ல் 224 புத்தகவெளியீட்டகங்கள் கலந்து கொண்டன. அண்மையில் நடந்த சந்தையில் 1200 புத்தக வெளியீட்டகங்கள் கலந்து கொண்டன. இந்தச்






சந்தையில் குறிப்பிடத்தக்கது சிறுவர் இலக்கிய வெளியீடுகள். இவை நம் நாட்டிலும் வெளிநாடு களிலும் வெளியிடப்பட்டவை இவை தனியாக அமைக்கப்பட்ட கூடத்தில் அழகாக வைக்கப்பட் டிருந்தன. ஆயிரக்கணக்கான சிறுவர் சிறுமியர் தம் பெற்றோர் களுடன் வந்து இவற்றைக் கண்டு நற்பயனையும் பெற்றனர்.

இதில் சிறுவர் சிறுமியர்களால் படங்களுடன் தயாரிக்கப்பட்ட ஒரு செய்தித் தாள் மிக மிக நீளமாகப் பரப்பி வைக்கப்பட்டிருந்தது யாவரையும் கவர்ந்து ஆச்சரியத்தில் ஆழ்த்தியது. இதில் ஒரு கருத்தரங்கமும் நடைபெற்றது. இதில் பல அறிஞர்கள் கலந்து கொண்டனர். 'சந்தமாமா'வின் ஆலோசகர்களான ரஸ்கின் பாண்டும் மனோஜ் தாசும் இதில் கலந்து கொண்டது குறிப்பிடத் தக்கது. இச்சந்தையில் 'அம்புலி மாமா'வும் அதன் மற்ற 12 மொழிப் பதிப்புகளும் நேர்த்தியான முறையில் வைக்கப்பட்டிருந்தது மிகச் சிறப்பான அம்சமாகும்.

தற்போது தொலைக் காட்சி இன்டர்நெட் போன்ற சாதனங்கள் புத்தகங்கள் படிப்போர் நேரத்தை வெகுவாக எடுத்துக் கொண்டாலும் அறிவை வளர்க்கப் புத்தகங்களே இன்னமும் பெரிதும் உதவுகின்றன. ஒருவனை அவனது நண்பர்களைக் கொண்டு மதிப்பிட்டு விடலாம் என்பது உலக வழக்கு. ஆம் ஒரு நல்ல புத்தகமே ஒருவனது நல்ல நண்பன்.





# போட்டோ வாக்கியப் போட்டி

தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும்.



போட்டோவாக்கியப்
போட்டி
அம்புலிமாமா
வடபழனி
சென்னை-600 026.





போட்டிக்கான தலைப்புகளை தபால் கார்டில் எழுதி ஏப்ரல் 25-ம் தேதிக்குள் மேலே உள்ள முகவரிக்கு வந்து சேருமாறு அனுப்ப வேண்டும். போட்டியில் வெற்றி பெற்ற தலைப்புகள் 2000 ஜூன் மாத இதழில் வெளியிடப்படும்.
சிறந்த தலைப்புகளுக்கு ரூ.100/- பரிசு

## வாழ்த்துக்கள்



*பிப்ரவரி 2000* போட்டியில்
பரிசு பெற்றவர் :
**கே. வெங்கடேசன்**
151, புதுத்தெரு, அருகந்தம்பூண்டி
தோட்டப்பாளையம்,
வேலூர் - 632 004



**பரிசு பெற்ற தலைப்புகள்**

முதலாவது போட்டோ : *யானையின் களிப்பு காட்டிலே!*
இரண்டாவது போட்டோ : *மழலையின் களிப்பு வீட்டிலே!*

